# அகநானூறு வசனம்

## மூன்றும் பகுதி



ற்றுமை ஆபீஸ், சென்னை-17

# அகநானூறு வசனம்

( மூன்றாம் பாகம் )

[ நித்திலக் கோவை ]

ஆசிரியர் :

ந. அ. இராமசாமிப்புலவர்

[ புலமை வித்தக போதினி முதலிய எண்பத்தேழு

நூல்களின் ஆசிரியர் ]

ஒற்றுமை நிலையம்,

8, வியாசராவ் தெரு,

தியாகராயநகர், மதராஸ்-17.

 [ ரூ. 1—25 ந. பை.

1959

# பதிப்புரை



சங்க நூல்களின் பயனை நன்கு கற்றோரே யன்றி மற்றையோரும் நன்கு துய்த்தல் வேண்டும் என்பதனையே ஒற்றுமை நிலையம் குறிக்கோளாகக் கொண்டு தொடக்க காலம் முதல் சங்க நூல்களை உரைநடையாக வெளியிடும் பணியை மேற்கொண்டு தொண்டு செய்து வருகிறது. சங்க மருவிய நூலாகிய எட்டுத் தொகையுள் அகநானூற்றின் களிற்றியானை நிரையை முன்னர் வெளியிட்டோம். இப் பொழுது அதன் தொடர்பாக மணிமிடைபவளம் நித்திலக்கோவை ஆகியவைகளையும் வெளியிடுகிறோம். இந்நூல்களைத் தமிழகம் ஏற்று நல்லாதரவு புரியுமென்று நம்புகிறோம்.

**எம். இ. வீரபாகு**

**பதிப்பாசிரியர்.**

# அகநானூறு வசனம்

## மூன்றாவது

## நித்திலக்கோவை

### 301. பாலை

[ பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வற்புறுத்தும் தோழிக்குச் சொல்லியது ]

தோழி! வற்கடகாலத்தே நீர் வறண்ட விளைநிலம் போல வாடி வருந்தித் துன்பம் மிக நம்மைப் பிரிந்த தலைவரைப் பலகாலும் நினைந்து வருந்துதலைச் சிறிது தணிந்திருப்போம் என்று கூறுகின்றனை ;

கொடையாளர் குறையாமற் கொடுத்த பரிசிலாகிய சிறிய உணவினை இடையறவின்றிப் பொருளைப் பாதுகாவாது உண்டு, நீரில்வாழும் முதலை வாயைத் திறந்தாற் போன்ற பாயால் வேயப்பெற்ற ஒலியினைச் செய்யும் வாயினையுடைய வண்டியிற் செல்லும் இஃது எமது ஊர் என்று சொல்லுதற்கில்லாத இடையூறற்ற வாழ்க்கையை உடையவராய் ;

பாலை நிலத்தினிடத்தே வந்த வெப்பத்தாலாகிய வருத்தத்தினை மரத்தடியில் தங்கிப் போக்கி இனிய ஒலியினையுடைய தெள்ளிய கிணைப்பறை ஒலிக்கவும் அழகு பொருந்தவும், குவிந்த கொத்துக்களையுடைய எருக்கினது நெருங்கிய பூக்களால் ஆகிய மாலை ஆடவர் சென்னியை அழகுபடுத்தக் காட்டுத்தீயில் எழுந்து ஒலிக்கும் தீயின் ஒளியில் காட்டிலுள்ள ஆவிரைச் செடியின் விளங்கும் பூக்களால் ஆகிய மாலை பெண்களின் அழகிய மார்பிடத்துள்ள பெரிய

கொங்கைகளிற் கிடந்து அசையச்; செறிந்த நடையினை யுடைய பெண்யானையின் உயிர்ப்பு ஒலியுடன் களிற்றின் உயிர்ப்பொலி கூடினாற்போலும் சிறுவங்கியம் பெருவங்கியம் ஆகியவைகளின் ஒலியோடு தண்ணுமை யொலி யானது பொருந்தி யொலிக்கக் கரிய முகில் இடிக்கும்போது நீரின்கண் ஒலிக்கும் தேரை யொலியினைப்போலப் பொருந்தத் தாளம் அமைத்துச் சிலவாகிய அரிக்கள் ஒலிக்கும் சிறிய பல வாச்சியங்களோடு பல ஊர்க்கும் போய்க் கூத்தாடுதலைச் செய்து, விரைவாகத் தலையினைச் சேர்த்துக் கட்டிய பல தொகையாகிய வாச்சியங்களையுடைய பையினராகிய மிகப் பெரிய சுற்றத்தினையுடைய கூத்தர் சென்ற பொலிவற்ற இடத்தினையுடைய மன்றினைப் பின்னாளிற் காணின் அக்காட்சி, பேரொலி செய்தலைக் கொண்டிருந்த பழைய ஊரார்க்குத் துன்பம் உண்டாகும். அத்தகைய துன்பத்தையே இம்மாலைக் காலத்திலே நாம் அடைந்துள்ளோம். அதனால் நம் காதலர் செய்த காதலினைத் தாழாது முடியுமோ மறப்பதற்கு? முடியாதல்லவோ?

*அதியன் விண்ணத்தனார்.*

## 302. குறிஞ்சி.

**[பகலே சிறப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.]**

அன்புடைய தோழியே! மலையில் நீண்டு வளர்ந்த செவ்வாழையின் அசையும் அழகிய இலைகள் அசைகிற காற்றானது மோதுந்தோறும் துயில் கொள்ளும் பெரிய யானையின் உடம்பைத் தடவும் நல்ல மலைநாட்டினை உடைய நம் தலைவனுடன் அருவியில் நீராடியும், பொருந்திய சுனையில் உள்ள பல இதழ்களையுடைய நீலப்பூக்களைப் பறித்தும், நல்ல பூக்களையுடைய வேங்கையின்கண் கூட்ட

மாக வண்டுகள் ஒலிக்கும் மணம் வீசும் பொழிலின்கண் விரும்பி விளையாடுதலைச் செய்தலும் அரியனவாகும் போலும்;

பெரிய கற்களையுடைய பக்கமலையில் என் தமையன்மார் உழுதவிடத்தே கரும்புபோலத் திரண்டு அழகு பொருந்திய பெரிய கதிரினையுடைய தினை கிளிகள் வீழுமாறு விளைத்திருத்தலை அறிந்திருந்தும் அற உணர்ச்சியில்லாத தாய் அங்கு செல்வீர்களாக என்று நம்மைப் போக்குவாள் போன்று இல்லாதவளாய், அழகுமிகச் சிலவாய தேமலையணிந்த நெருங்கிப் பருத்த இளமுலைகளை மென்மைத் தன்மையுடன் தழைத்தல்கூடிய கூந்தலோடு பன்முறையும் நோக்கா நிற்கும்.

*மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்.*

## 303. பாலை

[தலைமகள் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

நம்மிடை நிகழ்ந்தனவற்றைப் பிறர் அறிதலை அஞ்சிப் பேய்தான் கண்ட கனவினைக் கூறாததுபோன்று மறையினை வெளிப்படுத்தாது அடக்குதலால் பலவகைச் சிறப்புக்களுடன் கூடி நுட்பமாகப் பொருந்திய நம்முடைய காதலினது, வெற்றி பொருந்திய வேலினையும் வீரம்மிகுந்த படையினையும் உடைய பசிய அணிகலன்களையுடைய பொறையனது முகில் விரும்பி மழைபெய்த தெய்வம் விரும்பி யுறையும் அகன்ற இடத்தினையுடைய மிகப் பெரிய கொல்லிமலையின் முடியிற் பரவி, மிகுந்து செல்லும் அருவியின் ஒலிபோன்று அலராகி வெளிப்பட நம்மைப் பிரிந்து சென்ற நம் தலைவர் தம்முடைய அறிவுபற்றுக் கோடாக இரப்போர்வரின் அவர்கட்கு மலைபோலும் யானைகளோடு நல்ல அணிகளையும் அளிக்கும் கீர்த்தி பெற்ற மிகுந்த புகழினையுடைய பாரியினது பறம்பு அரணில்

வரிசையாகப் பறத்தலையுடைய குருவியின் கூட்டம் காலையிற் புறம்போய் வளைந்த புறத்தினையுடைய சிவந்தநெற்கதிர்களைக் கொணர்ந்து தருமாறு ஒருங்கே அந் நெற்கதிருள்ள இடத்தை ஆராய்ந்து திரிதலையுடையனவாகி ஞாயிறு மறையத் துன்பத்தைத் தரும் மாலைப் பொழுதில் மீண்டும் வந்தாற்போல் மீண்டுவருவார் என்று எண்ணிய அறியாமை பொருந்திய நெஞ்சமே நீ ஐயம் நீங்கித் தெளிதலை யடைவாயாக !

வற்றல் மரத்தினைப் பொருந்திய சிள்வீடு என்னும் வண்டுகள் பலவும் ஒருங்குசேர்ந்து உப்பு வாணிகரது பெருங் கூட்டமாகிய எருதுகளின் மணியொலிபோல ஒலிக்கும் பாலை நிலத்தினைக் கடந்து, நீர் வற்றும்பொழுது அதிலுள்ள மீன் நீர் உள்ள இடத்திற்கு மீண்டு சென்றாற் போல யான் அவர் சென்ற வழியே செல்லுதலைத் துணிந்துள்ளேன்.

*ஔவையார்.*

## 304. முல்லை

**[பாசறைக்கண் தலைமகன் தன்னுடைய நெஞ்சுக்குச் சொல்லியது.]**

நெஞ்சே ! பெரிய வானில் எழுந்த கூட்டமாகிய கரிய முகில் பனங்காயின் நீர் நிறைந்த நுங்காகிய கண் சிதறி விழுந்தவைபோலும் தெய்வம் நடுக்கஞ் செய்தல் போன்ற குளிர்ச்சி பொருந்திய பனிக்கட்டியோடு பாறுத்த பெயலாகிய மிகுந்த துளிகளைப் பொருந்தி வானிடத்தே பயின்று விளக்கம் வாய்ந்த அத்துளிகளைச் சொரிந்த இருள் மிகப் புலர்ந்த விடியற்காலத்தே செவ்வண்ணம் நீட்டிவைத்தாற்போன்ற சிவந்த நிலத்தினிடத்தே தேக்கிவைத்தாற்போன்ற தெளிந்த அறல்பட்ட நீரைக் குடித்துச் சிறிய

குட்டியைத் தழுவிக்கொண்ட துள்ளிய நடையினையுடைய இளைய பெண்மான் வலமாகத் திரிந்த கொம்பினையுடைய தலைமையுடைய கலைமானோடு அசையுங் கிளையினையுடைய குருந்த மரத்தின் பொருந்திய நிழலில் தங்கியிருக்க;

வண்டானது ஒலித்து ஊதப் பிடாவினது அரும்புகள் மலர; அரிய புள்ளிகளையுடைய மயில் ஆட; வரிப்பட்ட மணலில் நீலமணியோடு கலந்த செம்பவளத்தைப்போல் அழகுமிக; காயாவின் வாடற்பூவும் தம்பலப்பூச்சியும் பலவுஞ் சேரப் பரந்து நிலத்தில் ஈரம்பட்ட இடத்தை அழகுசெய்ய; இவ்வாறு காடாகிய நிலம் அழகுபெற்ற கார்காலம் தோன்றிய பொழுதில், மாமை நிறத்தினையுடைய நம் தலைவி நிமிர்ந்த கொம்புவாய்ந்த யானையை உடைய அரசனது பாசறைக்கண்ணே அவன் ஏவிவிட்ட வினையினால் வேறு நாட்டில் தங்கி நமக்கு அருள் செய்யாதோர் பெரிதும் அறத்தினை யுடையர் அல்லர் என்று அவனைக் கருதி நாம் அடையும் நோயினை அறியாளாய் எம்மை நொந்து வெறுப்பாளோ?

*இடைக்காடனார்.*

## 305. பாலை

**[பிரிவுணர்த்தப்பட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது. தலைமகன் பிரிவின்கண் தோழி தலைமகட்குச் சொல்லியதுமாம்.]**

தோழி! பகற்காலத்தும் நீங்காதாகிப் பெய்து இரவினும் நீங்குதல் இல்லாத வெள்ளத்துடன் மெல்லெனக் கழிய முகில் மழையைச் சொரிந்தமையால் குளிர்ந்து வருதலையுடைய வாடைக்காற்றால் நடுக்க முண்டாகின்ற வருத்தத்தையுடைய நள்ளிரவில், பல அடுக்கு மெத்தைகளால் உயர்ந்த வனப்பொருந்திய படுக்கையின்கண் பருகுதலைப் போன்ற காதலுடன் மாறி ஒருவர் மெய்யில் ஒருவர்

மெய் புகுவதுபோலும் கை விரும்பும் முயக்கத்தால் ஈருடம்பிற்கு ஓர் உயிரெனத் தகும் காதலர்களும் வருந்தா நிற்பரல்லரோ?

அருளில்லாத நம்முடைய தலைவர் பொருளீட்டும் வினைக்குச் செல்லத் துன்பத்தைச் சுமந்து வருத்தமுற்ற நெஞ்சுடையேனாகிய யான், பெருத்த அடியினை யுடைய பனைமரத்தில் துணையின்றித் தனியே தங்கியிருக்கும் கூரிய வாயினையுடைய அன்றிற் பறவையின் வருந்தத்தை யுடைய குரல் மூட்டுதலால், அகத்தே கொதிக்கின்ற உள்ளத்திடத்தே மிகுந்ததீயுண்டாகச் சூழ்ச்சியில்லாத மாக்கள் மெல்லென ஊதும் இனிய குழல் ஓசையைக் கேட்டு நான் எவ்வாறு ஆற்றியிருப்பேன்?

*வடமவண்ணக்கன் பேரி சாத்தனார்.*

## 306. மருதம்

[ தோழி தலைமகனுக்கு வாயின் மறுத்தது ]

மிகுந்த புகழையுடைய தலைவனே! அகன்ற பொய்கைக் கண்ணதாகிய பிரம்பினோடு கூடி நீண்டு வளர்ந்த முள்ளமைந்த கொம்பினையுடைய ஈங்கையின் பஞ்சு போன்ற உச்சியினையுடைய புதிய பூவும் ஈனப்பட்ட மாமரத்தின் இளந்தளிரும் தன்னைத் தடவுதலின் மீனையுண்ட நாரை துயிலும் நீர்சூழ்ந்த வளம் பொருந்திய வயலினிடத்தேயுள்ள நன்செய்க் கரும்பின் செறும்பினையுடைய புறத்தே ஊர்ந்து சென்று பொய்கையில் உள்ள ஆமை இளவெயில் காயும் நெற்களமைந்த தெருவினையுடைய நல்ல வளம் பொருந்திய ஊரனே;

மாட்சிமை பொருந்திய திங்களைப்போன்ற ஒளி பொருந்திய நெற்றியினையும் விளங்கும் அணியினையும்

உடைய உன்னுடைய பரத்தையாகிய ஒருத்தி நின்னைப் பழித்துக் கூறுஞ் சொல்லும் கூறிச் சிவந்த அழகிய இதழினையுடைய குளிர்ந்த கண்ணால் வருத்தம் மிகப் பார்த்து, நினது தண்ணிய நறிய மணம் கமழும் மாலையினை அறுத்து, நும்முடன் ஊடிச் சிறுகலாஞ் செய்து எமது மணம் நிறைந்த தெருவழியே சென்றாளன்றே. இதுதான் நினது தலைமையோ? எம்மைப் போற்றாது அகன்று செல்வாயாக!

*மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்.*

## 307. பாலை

[பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைமகனைச் செலவு விலக்கியது.]

ஐயனே! வேங்கையின் அடுகின்ற மாறுபாட்டை யொழித்த நீண்ட நல்ல யானை மயக்கத்தைத் தரும் மதத்தால் செருக்கினையடைந்து வலிமிகுந்து வழிப்போக்கர் களைக்கொலைசெய்யும்; முள்ளம்பன்றி பொருந்திய அகன்ற காட்டின் இடத்தையும் பெரிய கையினையுடைய கரடிக் கூட்டம் புற்றாம்பழச் சோற்றினை ஆராயும் புற்றுக்க ளமைந்த சுவரினையுடைய புதர்கள் படரப்பெற்ற பொதியி லிடத்தே, தெய்வம் போய்விட்ட வலிய தாளினையுடைய தூணில் நெடுங்காலங் கூடியிருந்த பழமைபற்றி விட்டு நீங்காமல் பெரிய புறாக்கள் பெட்டைகளோடு கூடி யொலிக்கும் பெரிய கற்கள் பொருந்திய ஊர்களையும் உடைய மலையடியில் உள்ள வழியில், சிறிய நெற்றி பசப் புற்றுப் பெரிய தோள் மெலிந்து மிகுந்த அழகையுடைய அல்குலின் அழகிய வரிகள் வாடப், பகலும் இரவும் மயங்கு தலையடைந்து மெல்லென மழை பெய்தலை ஏற்ற மலரைப் போலக் கண்ணில் நீர்பெருகி வழிய, இங்கே இவள் தனித் துத் துயரால் வருந்துவள் என்று எண்ணாமல் பொருளீட்

டும் வினையை விரும்பி நீ பிரிந்து செல்லுதல் பொருந்துவ தாகுமோ?

*மதுரை ஈழத்துப்பூதன் தேவனார்.*

## 308. குறிஞ்சி

**[ இரவு வருவானைப் பகல் வருக என்றது.]**

விளங்குகிற மலையானது மறையுமாறு வெள்ளிய முகில் சூழ்ந்து, மட்கலஞ் சுடுஞ் சூளையில் புகைபோலத் தோன்றுகிற நாட்டையுடையவனே! புலியோடு போர் செய்து வருந்திய நடையினையுடைய களிற்றியானை நீண்ட பிளப்பாகிய மத்தகப் புண்ணைக் கழுவி, இரவில் முகில்கள் ஆலங்கட்டியுடன கூடி மிக்க பெயலைப் பொழிந்தமை யால் விடியற்காலத்தே மிகுந்த வெண்மையை உடைய அருவியின் நீர் மிகுந்து பெருகி வருதலையுடைய இரவில் நீ ஏன் வருகின்றாய்?

பகற்கண்ணே வரின் தொலைதல் இல்லாத வேலினை யுடைய சிறந்த மகிழ்ச்சியை உடைய எம்தந்தை அமைத்த ஆண் யானைமேல் நிமிர்ந்து பிடிக்கமுடியாத மலைக் குகை யின் மேலேயுள்ள பரணில் சிறிய தினையிற்படியுங் கிளியினை எம்முடன் இருந்து ஓட்டியும் வளமுடைய பாறையின் இடத்தவாய பெருகிய நீரினையுடைய சுனையில் உள்ள குவளையின் தேன் பாயும் ஒள்ளிய நறிய பல பூக்களைச் சூடிய கூந்தலாகிய மெல்லிய அணையில் துயின்றும் இவ் வாறு பகற்பொழுது இனிது கழிய;

கரிய கிளைகளையுடைய குறிஞ்சி மரங்களமைந்த இருத் தற்கு இனிமையுடைய நும்மூர்க்குக் காவலாளர்க்கு மறைந்து காவல் கொண்ட புனத்தை வளைத்துண்ட பெரிய களிற்றி யானையைப்போலச் செல்வாயாக.

*பிசிராந்தையார்.*

## 309. பாலை

[ பிரிவிடை வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு வேறு பட்ட தோழிக்குத் தலைமகள் சொல்லியது ]

பாலினையுடைய ஆன் கூட்டத்தைப் பிடித்துக் கொண்ட அஞ்சாமையை உடைய வெட்சி வீரர் தம்மோடு போர் செய்த கரந்தையாரை வெற்றிபொருந்திய வாளால் வீசியும் அம்பினை வில்லில் இருந்து விடுத்தும் நெடுந்தொலை போகச் செய்துவிட்டு வலிய காட்டு நிலத்தினிடத்தே செலுத்தினர்களாக. தெய்வந் தங்கிய பெருத்த அடியினை யுடைய வேப்ப மரத்தடியில் கொழுப்பினையுடைய பசுவினைக் கொன்று உதிரத்தைத் தூவிப் பலியிட்டு, அதன் புலாலைப் புழுக்கி உண்ட இடமாகிய உயரிய இடமகன்ற பாறையில் களிற்றியானை தன் முதுகினைத் தேய்த்துக் கொண்ட கரிய அடியினை உடைய இலவமரத்தின் விதையாகிய வெள்ளிய கொட்டை ஆலங்கட்டியைப்போலப் பரவிக்கிடக்கும் காடுகள் மிகச் சேய்மையானவை என்று எண்ணுதவராய்க் கூத்தர், பெரிய குதிரைப்படையினையுடைய நல்ல போர்த்திறன் அமைந்த சேரனது திருந்திய வீரக்கழலை யணிந்த சிவந்த அடியினை விரும்பிச் சென்றாற்போல, தோழி! மூங்கிலின் அழகிய தண்டு உடைதற்கு ஏதுவாகிய கவண் கல்லின் வேகந் தங்கிய கடிய தாக்குதலை யுடைய வெப்பம் மிகுந்த கதிர்களமைந்த பகற்பொழுதில் இயங்குதல் இல்லாமல், இரவின்கண் தினைப் புனத்தை மேய்ந்த வலிய சினங்கொண்ட யானை குளிர்ந்த பெரிய தூற்றினையஞ்சும் குன்றுகள் குறுக்கிடும் நெறிகளை யுடைய நம் தலைவர் சென்ற நாட்டின்கண் நாமுஞ் சென்றால் என்னையோ?

*கருவூர்க் கந்தப்பிள்ளைச் சாத்தனார்.*

## 310. நெய்தல்

[ தலைமகனுக்குக் குறை நேர்ந்த தோழி சொல்லியது ]

குன்றுபோலக் காணப்பெறும் திரண்ட மணலையுடைய கடற்கரைத் தலைவனே! விரைந்து செல்லுந் தேரினை ஏவலாளருடன் தொலைவிலே நிறுத்தி இங்கு வந்து நிற்கும் பெருந்தன்மையாகிய இனியகுணத்தினை உடையவனுகின்ருய்; அதுவுமல்லாமல் பிறர் வணங்கத்தக்க தோற்றத்தினை உடையவனுகவும் இருக்கின்ருய்; இத்தகைய நீயும் மனச்சிதைவை மேற்கொண்டு, பல நாளும் வந்து பணிந்த மொழிகளைப் பலகாலுங் கூறுதலின் இத்தலைவியும் கருங்குவளை மலரைப்போன்ற மையுண்ட கண்கள் கலங்க நின்னிடத்திலே மிகுந்த மயக்கத்தினை யடைந்துள்ளாள்:

தாய்மார்கள் உள்ள பெரியமலையில் சுற்றத்தார்கள் பாராட்டக் காதலொடு வளர்ந்த காரிகையாதலின் இவளைப் போன்ருர் சிலகாலத்திற்கு மிகுந்த நாணமுடையவராவர். ஆகையால் இன்று இவ்விடத்தில் தங்குதலை விரும்பற்க. உப்பினைச் செலுத்திவரும் உப்பு வாணிகரது வண்டியோடு அவ்விடத்தே வந்த பாதுகாவல் எய்திய பேடை அஞ்சி யோட இடிபோலும் ஒலியினையுடைய அலை ஒலித்தெழுந்து சிதறி விழும் கடலை யெல்லையாகவுடைய எமது சிறிய நல்ல ஊர்; சிறிது சென்றவழி அழகிய பூக்கள் விரிந்த புன்னையின் மேலே தோன்றுகின்ற பனைமரத்தினின்றும் கூப்பிடு தூரத்தே யுள்ளதேயாம்.

*நக்கீரனுர்.*

## 311. பாலை

[பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளுக்குத் தோழி சொல்லியது.]

பெரிய பெண்யானையினைப் பரிசில் பெறும் பாணரைப்

போல் நமது மனைவியின் கடையில் நின்று, அரிய காவலை யுடைய மதில் சூழ்ந்த அகன்ற மலையின் ஒருபால் உள்ள எழுதிறுற்போன்ற செறிந்த நிலையினையுடைய கதவைப் பேய் வழங்கும் நள்ளிரவில் காவலர்கள் அயர்ந்திருக்குஞ் சமயம்பார்த்து திறந்துவந்து நம்மைக் கூடி நம்மைப் போன்ற அன்பிற் சிறந்தோர் இவ்வுலகத்தே எவரும் இல்லை யென்று கூறிப் பலகாலம் பொலிவுபெற்ற கூந்தலைத்தடவி அளிசெய்த காதலோடு இரக்கம் பொருந்திய மொழியினுல் நம்மைத் தெளிவித்து அகன்று சென்றோர், நீரற்றெழியத் திக்கெல்லாங் கொதிக்கப் புதிய வழிப்போக்கர்கள் வருங் கால் அவர்களைப் போற்றி ஆயர்கள் இளைய எருதுகளின் கழுத்திற் கட்டிய மூங்கிற் குழாயில் உள்ள இனிய புளிச் சோற்றினை அப்புதியரின் காதடைப்பு நீங்குமாறு தேக்கிலை யிற் பங்கிட்டுக் கொடுக்கும் புல்லி என்பவனுடைய வேங் கட நன்னுட்டிற்கு அப்பால் உள்ள கடத்தற்கரிய சுரநெறி யைக் கடந்து சென்றிருப்பினும் காலந் தாழ்க்காது விரை விலே திரும்பி வருவார்.

*மாமூலனுர்.*

## 312. குறிஞ்சி

**[தலைமகன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது. தலைமகள் சொல்லியதுமாம்.]**

காதல் மிகுந்த தோழியே! பெரிய மலைநாட்டினை யுடையவனுகிய நம் தலைவன் இருவர் நெஞ்சும் ஒன்று படுதலின் வரைந்து கொள்ளுதலாகிய அதனையே விரும்பி யமைந்து இரவில் வருதலாகிய துன்பம் நீங்க வரைந்து கொள்ளுதலை எண்ணுவானுகலின் காந்தட்பூக்களையுடைய இச்சிறிய ஊரின் அலரினைப் போற்றுது, உயர்ந்த மலையி னின்றும் விழும் மிகுந்த மழையாலாகிய அருவி நீரில் மார்பு

தெப்பமாகச் செவ்வரி பரந்த மதர்த்த குளிர்ந்த கண்கள் சிவந்திட நாம் நாளைக்கு மிகவும் மகிழ்ந்து விளையாடுவோம்; வருவாயாக!

மூங்கில் பொருந்திய பக்கமலை மறையக் கால் இறங்கி, இனிய ஓசை பொருந்திய முரசம்போல ஒலித்துப் பகைவர் ஓடும் புறக்கொடையினைக் கண்ட முழந்தாளினைப் பொருந்தும் பெரிய கையினையுடைய போர்வெல்லும் பாண்டியன் வென்று செல்லும் போரில் தூக்கிய கொல்லும் புகழ் வாய்ந்த வேலைப்போல் ஒழுங்காக மின்னி மழை பரவியுள்ளது; அதனைக் காண்பாயாக!

*மதுரை மருதன் இளநாகனார்.*

## 313. பாலை

**[பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது]**

தோழியே வாழ்வாயாக! இனிமேல் நீ வருந்துதற்கு உரியது ஒன்று உண்டோ? அஞ்சுதலை ஒழிவாயாக என்று கூறி, அழகிய ஒளிபெருகத் தழுவி நம் உள்ளத்தைக் கவர்ந்தோராகிய நம்முடைய தலைவர், தாம் சென்ற சுர நெறியை நாம் எண்ணி, நாள்தோறும் நீரில் மூழ்கிப் பொரும் கயல்களைப்போன்ற கண்களில் நீர் பெருக, மென்மையாக வெவ்விய உயிர்ப்பினை உயிர்த்து, இரவும் பகலுந் துன்பம் நலிய வருந்திப் பாம்பு விழுங்கிய திங்களென நெற்றி ஒளியினை யிழந்திடத் தம்மையன்றி வேறு பற்றுக்கோடில்லாத நாம் இங்கே தங்கியிருக்கப், பொருளை விரும்பிச் சென்றுராயினும், மிகுந்த நிதியினைச் சொரிந்துவிட்ட உள்ளீடில்லாத துணிப்பைபோலப் பாம்பு உடல் வாடிக் கிடக்கும் வறட்சிமிகுந்த காட்டினிடத்தே வழிபறிப்போர் அம்பினை எய்தலால் இறந்து பட்டோராகிய ஒழியாத புதியோரது பிளந்த புண்ணில் இருந்துசொரியும் செந்நீரைக்

குடித்துக் காகங்கள் ஒற்றராகச் செல்லும் மக்களைப் போல உள்ளடங்கிய குரலினையுடையவாய் மனையிடத்தே வந்து தங்கும் இடமாகிய கற்கள் உயர்ந்த பக்கமலை இடமாகிய மலையைக்கடந்து சென்றோராகிய அவர் நம்பால் அருள்செய்து வருவர்.

*பாலைபாடிய பெருங்கடுங்கோ.*

## 314. முல்லை

**[வினைமுற்றிப் புகுந்த தலைமகனுக்குத் தோழி சொல்லியது]**

நீலமணியை ஒத்த நீர்பொதிந்த சூலினைக் கொண்டு, கரிய விண்ணினிடத்தே அதிருமாறு இடித்துப் பெய்த நீரினால் நிலங் குளிர்ச்சியை அடைந்து காடு தழைத்திட இனத்தை ஆராயும் உழவர் இனிய குரல் ஒலிக்கக் குட்டியினையுடைய இளைய பெண்மானைத் தழுவிக்கொண்டு காட்டில், முறுக்கிய கொம்பினையுடைய கலைமான் பசிய பயிரிலே; துள்ளித் திரிய முகில் மிகுந்த பெயலைத் தந்த கார்ப் பருவத்தைச் செய்யுங் காலத்தே;

பாணனே! புரவிநூல் கூறும் முறைப்படி நுண்ணிதின் அமைந்த விரைவாற் காற்றெனக் கூறத்தக்க குதிரை கல்லென்றொலிக்கும் மணி இடையறாது ஒலிக்கத் தாவிச் செல்லும் வன்மையை உடைய பாகனால் அடக்கிவிடப் படுந் தாவுஞ் செலவினையுடைய நீண்ட தேர் ஈரம் பொருந்திய இடங்களில் தான் செல்லும் வழியினை அறுத்துச் செல்ல இனிய நரம்புத் தொடையினையுடைய நல்ல யாழில் வருத்தத்தைத் தரும் செவ்வழிப் பண் தோன்ற இத்தகைய மாலைப் போதில் வந்து சேராராயின் அவர் தம் நிலை யாதாகுமோ? சிறிது உரைப்பாயாக என்று தெய்வக் கற்பினையுடைய மடப்பம் பொருந்தியவளாகிய எம்முடைய தலைவிகூற; பெரும! செய்யப்படும் வினைகள்

அழிதற் கேதுவாகிய மயக்கம் பொருந்திய நெஞ்சில் வெறுப்புத் தரும் துன்பம் அகல நீ வந்து சேர்ந்தாய் அதனால் எம் தலைவிக்கு இனிய தொன்றினைச் செய்தாய் ஆவாய்; நின்னுடைய மாலை வாழ்வதாக. நினது அகன்ற மார்பு மனையின் வேலியாகச் சூழ்ந்த வெள்ளிய முல்லை மலர்களால் ஆகிய பெரிய மாலை கமழும் புதுமையுறத் தழைத்த கூந்தலையுடையவளும் இனிய நகையை உடைய வளும் இளையவளும் ஆகிய இவள் தழுவிக்கொள்ள நிலை பெறுவதாக.

## மதுரை அளக்கர் ஞாழார் மகனார் அம்மள்ளனார்.

## 315. பாலை

[மகளைப் போக்கிய தாய் சொல்லியது]

தலைமயிரும் குறுகிய நெறிப்பினைக்கொண்டன. முலைகளும் உச்சியில் உள்ள மெல்லிய முகத்தால் சிமிழினுடன் மாறுபட்டன. இவள் பெண் என்னும் இயல்புடையவளானாள் என்று என் கண்களே துணையாகப் பல்முறை பார்த்து எனது நெஞ்சமானது நேற்று மிகவும் ஐயப்பட்டது. அதன் பின்னும் என்னுடைய அறியாமையினால் நான் என்னுடைய மகளை இல்லிற் செறியாதொழிந்தேன்.

பெரிய புகழினையுடைய பாண்டியனது மதுரையைப் போன்ற தனது அரிய காவல் பொருந்திய பெரிய மனையில் சிலம்பு கழித்தலாகிய நோன்பினையும் செய்யப் பெறுளாய் நெடுந்தொலை சென்று, நீரற்ற சுனைக்கண் நீர் பெறாது தளர்ந்து உண்டமையால் புல்லிய காய்களையுடைய நெல்லியின்கண் மேல்காற்று உதிர்த்துவிட்ட குவிந்த கண்ணினையுடைய பசிய காய்கள் நூல் அற்று உதிர்ந்த துளையினையுடைய பளிங்குக் காசுகளைப்போல வறிய நிலத்தில் உதிர்ந்து கிடக்கும் காட்டு நெறியில் கூரிய வேலினையுடைய

தன் தலைவன் பொய்கூறி அழைத்துச் செல்ல விரைந்து சென்று, புதர் போன்ற குடிசையின் முன்னிடத்தில் தேக்க மரத்தின் அகன்ற இலையில் குவிக்கப்பட்ட புழுக்கிய ஊனினை யுண்ணும் காட்டிற் பொருந்திய வாழ்க்கையினை யுடையாரது சிற்றூரின்கண் அவள் தங்கி யிருப்பளோ?

*குடவாயிற் கீரத்தனார்.*

## 316. மருதம்

**[ தலைமகனுக்கு வாயில் நேர்ந்த தோழி தலைமகளை நெருங்கிச் சொல்லியது. ]**

துறையின்கண் மீன்கள் இயங்கும் உயரிய நீர் நிறைந்த பொய்கைக்கண் விளங்கும் ஆம்பல் மலரை மேய்ந்த நெறித்த கோட்டினையும் மிகுந்த குளிர்ச்சி பொருந்திய முதுகினையும் உடைய முதிய எருமைக்கடா மிகுந்த சேற்றின் குழம்பிலே கிடந்து இரவெல்லாம் உறங்கி, ஞாயிறு தோன்றிய காலையில் பசிய ஊனினையுடையவரால் மீன்கள் மிதிபட்டு அழிய வெளிப்பட்டு வெள்ளிப் பூக்களை யுடைய பகன்றைக் கொடியினைச் சூடிக்கொண்டு பழமை யான ஊரின்கண் போரில் வெற்றியடைந்த வீரர்களைப் போல் புகும் ஊரினையுடைய நம் தலைவன்;

தன்னுடைய தேரிலே அழைத்துக்கொண்டு வருத லால் வந்த விளங்கும் அணி நெகிழ்ந்த தோள்களையுடைய ஊர் தாங்காத பரத்தைமையை மேன்மேலுந் தன்பால் எய்துவிக்க அதனைத் தாங்க முடியாதவனாக உள்ளான் என்று மனை வாழ்க்கையிற் பொருந்திய கற்புடைய மடந்தையாகிய நீ பயனில்லாமல் அவன்பால் ஊடுதல் தகுமோ?

தலைவன் பரத்தைமையைப் புலந்து பிரிந்துறையும் வன்மையுடையோர் திருமகளானவள் தம்மிடத்திலே

நின்றும் நீங்கச் சிறிய அரிசியைப் புடைத்துத் தாமே சமைத்துண்டு தனித்தோர் ஆகித் தேன்போலும் இனிய மொழியினையுடைய மக்கள் பாலின்றிச் சுருங்கிய முலையினைச் சுவைத்துப் பார்க்க எளிமையுடன் தங்குவாராதலை அறிந்திருந்தும் தலைவன் பரத்தமை குறித்து மாறுபாடுறுவோர் அறிவற்றவராவர்.

*ஓரம்போகியார்.*

## 317. பாலை

**[ தலைமகன் வரவுணர்ந்த தோழி தலைமகளுக்குச் சொல்லியது ]**

விண்ணின் கண்ணே மழைபெய்து நின்றதாகப்பரப்பி வைத்தாற்போன்ற இருளினைப் பகலினும் விரித்துப் புகையின் நிறம்போலும் உருவினையுடைய பனிக்காலம் நீங்கக், கூரிய பற்களையும் ஒள்ளிய முகத்தினையும் உடைய பெண்டிரது பஞ்சூட்டிய நகத்தைப்போன்ற குவிந்த அரும்புகளையுடைய முருக்க மரத்ினது கூரிய முனையினையுடைய முற்ருத பல பூவிதழ்கள் உதிருமாறு. மலர்த்தேனையுண்ணும் விருப்பத்திஞல் வண்டுகள் ஒருங்கு கூடிப் பாய்ந்து கிண்டி உதிர்த்திடவும் பொன்ஞற் செய்யப்பட்ட பொற் கொல்லரது சிறிய தராசுத் தட்டுப் பொலிந்திட வெள்ளியின் மெல்லிய கம்பி அறுத்தலால் குறைந்து உதிர்வனவற்றைப்போல ஒலியினையுடைய வண்டின் கூட்டம் ஊதுந்தோறும் கோங்கின் பூவினிடத்தே குரவமரத்தின் உயர்ந்த கிளையில் உள்ள நறிய மலர்கள் குறைந்து உதிரவும் ஒலித்து எழுகின்ற வண்டின் விட்டிசைக்கும் ஒலி தெறித்துவிடும் விளரி நரம்பின் ஒலியைப்போல இம்மென ஒலிக்கும் மானினங்கள் இன்பமுற்ற அழகிய வேனிற்காலத்திய் வெயிலின் விளக்கத்தை யொக்கும் மலர்களைச் செறிந்த மராமரத்தில் இருந்து குயில் செய்யும்

ஆரவாரத்தினை நம்முடனிருந்து கேட்க யாம் வருகின்றேம் என்று நம் தலைவர் குறித்த இளவேனிற்பருவம் அவர் இருக்குமிடத்தில் இல்லையோவென மெல்லென ஆராய்ந்து எண்ணிக்கொண்டு இருந்தேமாக.

திண்மையுடையோர் ஒன்றை விரும்பி நினைத்த விடத்து உள்ளத்தில் நினைந்தவை வந்து சேர்வதுபோல் நம் காதலர் வந்து நின்றார். பலநாளாக நம் அன்னையும் அறிந்திட நம்மை வருத்தி நம்முடைய நல்ல நெற்றியில் பரவிய பசலைநோய் நம்மைப் பிரிந்து எவ்விடத்துச் சென்றதோ?

*வடமோதங்கிழார்.*

## 318. குறிஞ்சி

**[இரவுக் குறிவந்த தலைவனை வரவு விலக்கி வரைவு கடாயது.]**

மலையினின்றும் விழும் அருவி யொலியுடன் வண்டினது ஒலி கூடித்; தண்ணுமை யொலியுடன் கூடிய யாழ் நரம்பினது ஒலியைப்போல் இம்மென்று ஒலிக்கும் பழமையான வெற்றியினையும் அகன்ற இடத்தினையும் உடைய பயன் பொருந்திய மலையை உடைய நாட்டிற்குத் தலைவனே! காட்டில் உள்ள விலங்குகள் செல்லும் நெறியில் யானைகளும் இயங்கும் விண்ணில் மிக உயர்ந்த இடத்தே இடியும் மிகவும் முழங்கும். மேலும் அந்நெறிகள் பாம்பினையும் புலியினையும் எல்லோரும் அஞ்சுமாறு உடையன. இத்தகைய ஒடுங்கிய வழியில் இரவிலே நீ துணையின்றி வருகின்றாய். நீ வரைந்து கோடலை விரும்பினும் பெறுவாய் ஆகவே ஒன்று, இன்று முதலாக அவ்வாறு வராதே. வருவாயேல் யாங்கள் இவ்விடத்தில் மயக்கமுறும் துன்பத்திலிருந்து நீங்குமாறு என்னைக்கண்டு நீங்குங்காலத்து, நினது மலைகள் பொருந்திய சிற்றூரை யடைந்தபின்னர்,

வேட்டமாடுங் காலத்தில் மூங்கில் மிகுந்த காட்டில் பிரிந்த பின் வேட்டுவர்களோடு நாய்களை அழைக்கும் குறிப்பினைக் கொண்டுள்ள, ஊது கொம்பினைச் சிறிது ஊதுதல் வேண்டும்.

## 319 பாலை

[ செலவுணர்த்திய தலைமகனுக்குத் தோழி செல்வழுங்கச் சொல்லியது.]

கருமணிபோன்ற வாயினையுடைய காக்கையின் கரிய நிறத்தினையுடைய பெரிய சுற்றம் பிணிப்புற்ற விழுதுகளையுடைய ஆலமரத்தின் அசையுங் கிளைகளில் ஏறியிருந்து வளைந்த வில்லையுடைய எயினராகிய குறும்பினின்றும் ஊக்கி யெழும் கொடுந்தொழிலையுடைய மறவர் வில்லால் எய்தலால் இறந்து பட்டோருடைய விழுந்து கிடக்கும் பிணங்களைக் கவர்ந்துண்ணும் பாழ்பட்ட அகன்ற பாலையிடத்தே; தெய்வம் என்னுமாறு வடிவுகொண்ட கண்களையும் அழகாக மெலிந்த இடையினையும் நுண்ணணிய மாமை நிறத்தினையும் பொன்போலும் பூக்களையுடைய வேங்கையின் புதிய மலரைப் போலத் தேமலையணிந்து நல்ல மார்பின் கண் எழுந்த அழகிய முலையினையும், வண்டு மொய்க்கும் கூந்தலையும் பெரிய தோளினையும் உடைய இவளிடத்தினின்றும் பிரிந்து அகன்று போதலை எண்ணுவீராயின்; நுமக்கு அரியபொருள் வந்துபொருந்துவதாகக்கொய்யப்பட்ட குழையாகிய அழகிய தளிரினையொத்த பிரிதற்றுன்பத்தினைத் தாங்குதற்கரிய வலியின்னும் மெல்லிய தன்மையை உடையவளும் இளையவளும் நும்மிடத்துப் பெரிய அன்பினை உடையவளும் ஆகிய இவள், நாம் பிரிந்து செல்வோம் என்னும் உம்முடைய எதிரில் நின்று பிரிந்து ஆற்றியிருப்போம் என்று கூறும் அறிவுடைமை, அறிவு

டமை இல்லாதவளாவாள் இதற்கு யான் யாது செய்வேன்?

*எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார்.*

## 320. நெய்தல்

[பகற் குறிக்கண் வந்த தலைமகனைத் தோழி வரைவு கடாயது.]

உயர்ந்த அலைகளுடைய கடலில் வலையினை விசைத்து இழுத்தலால் பற்றி மீன் பிடிக்கும் படகினராகிய தந்தையன் கொண்டு வந்த தறுகண்மையுடைய வலிய மீன்களைத் தழை அணியினை அணிந்த அல்குலையுடைய செல்வம் மிகுந்த தங்கைமார் விழாச் செய்யுந் தெருக்களில் இவை இன்ன விலையின என்று கூறிவிற்கும் கடற்கரைச் சோலை சூழ்ந்த சிற்றூர்களையுடைய கடற்கரைத்தலைவனே! மலரினையொத்தமையுடைய கண்களமைந்த எம் தோழியின் துன்பமும் ஊரார் வாயின் அலரும் நீங்குமாறு நீ அருள் செய்யாது பொய்த்தாலும்;

நீண்ட உப்பங்கழியைத் துழாவி மீன் பிடித்துண்ணும் குறிய காலினையுடைய அன்னம், அடும்பங்கொடி பொருந்திய மணல் மேட்டிலிருந்து தனது அழகிய சிறகினைக் கோதி உலர்த்தும்.

வளைந்த கிளையினையுடைய புன்னை மரத்தின் பூம்பொழி அழகு செய்யும் பெரிய துறைக்கண் நெகிழும் நுண்மணலைப் பிளந்துகொண்டு வந்த கொடிஞ்சியை உடைய நீண்ட தேரினை நாங்கள் செய்து விளையாடிய வண்டற்பாவை அழியுமாறு செலுத்தி வந்து நீ இவளுடைய தோளின் நலத்தினைப் புதிதாக நுகர்ந்த நாளில் கடலானது அறியுஞ் சான்றாகக் கூறிய சூளுரையும் பொய்யாகுமோ?

*மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்.*

# 321. பாலை

[மகட் போக்கிய செவிலி கூறியது.]

பரலினையிட்டு மூடியதும் ஆராய்ந்துகொண்டதுமாகிய சிலம்பினை நீக்கி, தன் தாய் அறிதலுக்கு அஞ்சி, மூங்கில் கள் உயர்ந்த பக்க மலையை உடைய மலையைத் தன் தலை வனுடன் கடந்து சென்ற என் மகள் ;

பசியடைந்த யானையின் பொலிவற்ற கண்ணைப் போன்ற நீரற்ற சுனையுட் புகுந்து வரும் மேல் காற்றின் தெளிந்த ஒலி தோலினை இழுத்துக் கட்டிய பறையொலி போல மலைப்பிளப்பில் ஒலிக்க, மெலிந்து நீண்ட காலினை யுடைய அழகிய பெண்மான், உண்ணுதற்கு அதனிடத் திலே விருப்பம் மிகுந்த கலைமான், குதிர்போன்ற அடி மரத்தினையுடைய இலுப்பை மரத்தின் வெள்ளிய பூவினைத் தான் உண்ணாது தனது ஆண் குரல் தோன்ற அதனை யழைக்கும் சேய்மைக் கண்ணுள்ள ; பெரியமடியினையும் ஒலிக்கும் மணியினையும் உடைய கூட்டமாகிய ஆனிரை கள் பருக; கோவலர் தரிசு நிலத்தே கற்களை யுடைத்து இயற்றிய பில்கும் ஊற்றுக் கண்ணினையுடைய கிணற்றி னைக் கன்றினையுடைய இளையபிடி தன்களிற்றுடன் கூடித் தடவிப் பார்க்கும் பொலிவற்ற இடத்தினையுடைய மன்றி னையும், அழகிய குடியிருப்பினையும் உடைய சிற்றூரின் கண்ணே; இரவில் தன்னுடைய துணைவனுடன் ஓர் ஒதுக் கிடத்தே தங்கியிருப்பளோ அல்லது அவ்விரவில் அம்பினை யெய்யும் ஆறலைப்போரை அஞ்சாத தறுகண்மையை உடைய காளையாகிய தலைவனுடன் அவன் முன்னே நடந்து செல்லுவாளோ? அல்லது வேறெக் காரியத்தினைச் செய்வாளோ? நான் வருந்துவேனுகின்றேன்.

கயமனார்.

## 322. குறிஞ்சி

[ அல்ல குறிப்பட்டுப் பெயர்கின்ற தலைமகன் தன்னுடைய நெஞ்சிற்குச் சொல்லியது ]

நெஞ்சே! நம்மை இவ்வாறு வருத்திய நம்முடைய காதலி இடிபோன்ற முழக்கினையுடைய ஆண்யானைகள் திரண்ட வாட்கள் பின்னிய போரின் கண்ணே; விளங்கும் வேலினையுடைய படையினையும் கடிய தேரினையும் உடைய திதியன் என்பவனது மலையினின்று வரும் அருவி விழும் மரங்கள் நெருங்கிய காட்டில், பிறைத்திங்களையொத்த கோட்டினையும் அஞ்சாமையையும் உடைய பன்றியினது இறைச்சித் துண்டினைத் தின்ற புலிகள்கூடி முழங்கும் பக்க மலையினையும், உச்சிப் பாறையில் உள்ள இனிய தேனை அறுத்தெடுக்க முயலும் குறவர்களும் ஏறி யறியாத ஏறுதற்கரிய நீண்ட உச்சிமலையினையும் உடைய புகுதற்கரிய பொதியில் மலையினைப்போல் பெறுதற்கு அருமையானவள்; இதனை யுணராது விளங்கும் வெயில் மறையவே முகில்பரந்து மின்னல் பிளந்திடமிகுந்தமழையைச் சொரிந்த நள்ளிரவில் அமையாத காமம் வருத்தா நின்று அலைத்திட மலையுச்சியினின்றும் வீழ்ந்திறப்பவர்களைப்போல அச்சம் உண்டாக நடுங்கிக், கோலால் அடிக்கப்பட்ட பாம்பைப் போல் வேறு துணையில்லாமலிருந்து வாடுவையோ?

*பரணர்.*

## 323. பாலை

[ பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. ]

கற்பினால் மேம்பட்ட தலைவியே! பலாமரங்கள் பல திரண்டுள்ள மூங்கில் நெருங்கிய பக்கமலையில் செல்லுகின்ற யானைக் கூட்டத்தைப்போல, விண்ணின்கண் விளங்கும் ஞாயிறு மழுங்குமாறு பரவிப் பாம்பினது படங்கெடு

மாறு இடிக்கும் கடிய குரலினையுடைய இடியேற்றுடன், நீர்க்கட்டியோடு கூடிய மிகுந்த துணிகளைப் பெய்து நின் கூந்தலைப்போன்ற முகில்கால் இறக்கியது.

இம்மென்றெழும் பெரிய அலரினை இவ்வூரின்கண் நம்பாற் செய்வோருடைய செருக்குப் பொருந்திய சொல்லானது கெட நம்முடைய காதலர் வந்து விடுவர் என்பது உண்மையாதலை நினது அழகிய சிவந்த வலியற்ற சிறிய அடிகள் நிலத்திற் பொருந்துதலை அஞ்சி மெல்லென உடல் வளைந்து நடக்கும் நடை அழகுபெற நடந்து காணுதற்கு வருவாயாக!

*புறநாட்டுப் பெருங் கொற்றனார்.*

## 324. முல்லை

[வினை முற்றிய தலைமகன் கருத்துணர்ந்து உழையர் சொல்லியது.]

தளிரின் இயல்வாய்ந்த கிளி இனிது வளர்த்த இளைய குஞ்சின் சிறகினைப்போன்ற பெய்யும் மழை வளர்த்த பசிய பயிரினையுடைய காட்டில் பறையின்கண்போன்ற நிறைதலையுடைய சுனைகள்தோறும் மழை பெய்தலால் உண்டாகிய குமிழிகள் தோன்றிக் குறிப்பனவற்றை யொத்திருக்கச், சேற்றின்கண்ணே பொருதலால் எழும் குமிழிகள் தோன்றிச், சினையினின்றும் காற்று உதிர்த்தலால் மணங் கொண்டு பரந்து சிச்சிலிப் பறவையின் சிறகினையொப்ப அறிவினிடத்துக் கோலஞ்செய்த வண்டுகள் தேன் உண்ணும் நறிய பூக்களை அறுத்து ஏகிய தேருருள் குளிர்ந்த நிலத்தினிடத்தே பிளந்து சென்ற சுவட்டில் ஒன்றன்பின் ஒன்றாக வரிசை பொருந்தச்செல்லும் பாம்புபோல விரைந்து நீர் முடுகிச்செல்ல, முல்லையானது மலரும் மாலைக் காலத்தே நகரின்கண் புகுதலை ஆராய்ந்துணர்ந்து பெருந் தகையாகிய தலைவனுடைய தேர் செல்லாநிற்கும்.

திருந்திய அணியினையும் பெரிய மென்மை வாய்ந்த மூங்கில் போன்ற தோளினையும் மடப்பம் பொருந்திய மொழியினையும் உடைய தலைவி இன்று விருந்தாடுதலும் பெறுவாள் போலும்.

ஒக்கூர் மாசாத்தியார்

## 325. பாலை

[ கொண்டு நீங்கக் கருதி யொழிந்த தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

தோழி! நீ வாழ்க! யான் கூறுவதனைக் கேட்பாயாக. நம்முடைய காதலர் வெள்ளிய மணல் உயர்ந்த பொலிவு பெற்ற வாயிலையுடைய பெரிய மனையின்கண் இருள் செறிந்த நீண்ட இரவில் புணருங் குறியமைந்த களவொழுக்கமும் வரம்பு கடந்து நீண்டது. தாயும் இக்களவினை உள்ளத்திற்கொண்டு நீங்காதவளாகக் காவல் செய்திருப்பாள். பின்னர் மிகவும் இங்குத் தங்கியிருத்தல் எவ்வாறு முடிவதாகும்? இரங்கத்தக்கான் என்று இரக்கமுற்று.

வெற்றி யொழுக்கத்தால் மேம்பட்ட விருப்பத்தினால், அள்ளன் என்பானை நாட்டினைக் கொள்ளுமாறு பணித்த அதியன் என்பான் இறந்த பிறகு சிறந்த ஒலியினையுடைய பெரிய கிணையானது ஒலியடங்கினாற்போல் மலையின் அழகு ஒழிந்த செறிந்த காடாகிய அரிய பாலை வழிகள் ஒரு தலையாகக் கொடியன. நின் கூரிய பற்கள் நீர்பருகுமாறு குளிர்ந்த மழை ஒருநாள் பெய்வதாக.

ஒளி பொருந்திய நெற்றியினையும் தளரும் இயல்பினையுமுடைய அரிவையே! பின் நின்னுடன் செல்வேம் சில நாள் அமைந்திருப்பாயாக என்று; பலகாலம் [illegible]
[illegible]

யில்லாத ஊக்கத்துடன் கொண்டு தலைக்கழிதலாகிய வினையை வற்புறுத்திக்கூறி அவையெல்லாம் அழிந்து போக;

வடக்கின்கண் நல்ல வேலையுடைய பாணனது சிறந்த நாட்டின்கண் உள்ளதாய ஒளிபொருந்திய வானின் கண்ணுறைகிய ஞாயிற்றின்வெம்மைமிக்க நீண்ட சுரத்திலே, வழிச் செல்வோர்களைக் கொல்லும் யானை வழியினைப் பார்த்துத் தங்கியிருக்கும் சோலைகளையுடைய காட்டு வழியில் மாலைக் காலத்தே போய் நாம் இவண் ஒழிந்திருக்கச் சென்றார் ஆகலின், நோயினைச் செய்யும் பகுதியால் ஒருதலையாக யாது பழியுண்டாகுமோ?

*மாமூலனார்.*

## 326. மருதம்

**[ தோழி தலைமகனை வாயில் மறுத்தது.]**

ஊரலாகிய அழகுவாய்ந்த உருப்பெற்ற தேமலையும் பெரிய அமர்செய்யும் குளிர்ந்த கண்களையும் பெரிய தோளினையும் சிறிய நெற்றியினையும் உடைய நின் இளைய பரத்தை அழகிற் சிறந்தவளாவள் ஆகலின்தலைவ; வெற்றி பொருந்திய வேலையும் அணிகலன்கள் அணிந்த யானையையும்உடைய சோழனது படைத்தலைவனும்ஓடக் கோலால் ஆழம் அளந்தறியப்படாத காவிரியின் கரையினைச்சார்ந்த தோட்டங்களையும் நீர் நிறைந்து ஓடும் மதகுகளையும் உடைய போர் என்னும் ஊருக்குத் தலைவனும் ஆகிய பழையன் என்பான் பகைவர்மீது செலுத்திய வேல்போல அவளாற் பார்க்கப்பெற்றோர் பக்கல் அவள் கண்கள் தைத்தலைத்தப்பட மாட்டா.

செல்வர்களுடைய விரைந்து செல்லுந் தேர் குழித்த தெருக்களிடத்தே; நீண்ட கொடிகள் அசையும் அட்ட வாயில் என்னும் ஊரிடத்தேயுள்ள நீண்ட கதிர்களை

யுடைய வயல்களின் பெரிய அழகினையொத்த அவளது அழகினைப் பாராட்டி அழகிய நடையால் விளக்கமுற்று அவளோடு நீர் விழாவின்கண் செல்லுதல் நினக்குத் தக்க தாகும்.

*பரணர்.*

## 327. பாலை

**[பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.]**

உறுதியில்லாத மனமே! இன்பமுந் துன்பமும் புணர் தலும் பிரிதலும் நல்ல பகற்பொழுதிலும் இராப்பொழுதி லும்போல வேறு வேறு தன்மையினை யுடையனவாகி மாறுக எதிர்ப்பட்டு நிற்பன என நீ அறிந்துள்ளாயாயின் இவளை நீங்கிச் செல்லும் துன்பத்தையுடைய கொடிய சுர நெறியில் நல்ல பொருள்வேட்கை செலுத்த நீ சென்று சேர்தலும் தக்கதாகுமோ?

நீ செல்லுவதற்கே துணிந்து விட்டாயாயின் ஞாயிற்றி னது மிகுந்த கதிரால் தோன்றும் ஆவியாகிய அவற்றின் அலைகளைத் தண்ணீர் என்று விரும்பி, விலங்குகள் மிக ஓடி யலையும் மரற் செடிவாடும் அகன்ற இடத்தினையும், களர் பரந்த இடமகன்ற பரப்பினையும், செங்குத்தான மலையி னின்றுங் கொழித்துவரும் அருவி நீரைப்போலப் பாம்பி னது அழகிய வரிகளையுடைய உரிக்கப்பெற்ற தோல்கள் பொருந்தும் பாறையிடங்களையும் உடைய புற்றுக்கள் அடிமரத்தில் கட்டப்பெற்றுள்ள காய்ந்த கிளைகளையுடைய மரத்திடத்தவாய பெய்யும் முகிலின் நிறம்போலும் உரு வினையும் நீலமணிபோன்ற கண்ணினையும் உடைய காக்கை கள் பசிய கொழுப்பினைக் கவர்ந்துண்ணும் இடமாகிய மிகுந்த பிணங்கள் கிடக்கும் கிளைப்பட்ட நெறிகளாகிய வழிகளிற் செல்லும் வணிகர்கள் போகும் இடங்களில்

பின்னேயிருந்து இரக்கமுருது அவர்களைக் கொன்ற ஆறலைப் போர் தங்கள் அம்புகள் செலவானதன் பொருட்டே யிரங்கும் வழிகளையுடைய மூங்கில் நெருங்கிய காட்டினைக் கடந்தபின் எங்களைச் சிறிதேனும் நினைத்தலுஞ் செய்வாயோ ?

*மருங்கூர்ப் பாகைச்சாத்தன் பூதனார்.*

## 328. குறிஞ்சி

[ இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியது.

தோழி! சுரபுன்னை மரங்கள் நிறைந்த மலைச்சாரலில் முகிலானது வலமாக எழுந்து கூத்தரது முழவம் அதிர்ந்தாற்போன்ற முழக்கத்தினையுடைய இடியேறுகளுடன் கூடி மிகுந்த பெயலைச் சொரிந்த நள்ளென்னும் ஒலியினையுடைய நள்ளிரவில் பாம்பினுடைய பசிய தலையை இடறிக் கொண்டு அந்தப் பாதி யிரவில் வந்து எம்முலையிடையே பொருந்தித் தமது வருத்தம் தம்மிடத்தும் நின்று நீங்க உடலைத்தழுவி இரவெல்லாம் இவ்வாறு இனிமையாகப் பொருந்திய நண்பினை விளங்கும் வளை நெகிழவும் நமது துன்பம் பரவி வருத்தவும் அவர்பின் வெறுத்தல் தெளிவாதலை நாம் நன்கு உணர்வோமாயின், முகில் தவழும் பக்க மலையில் இளைய பெண் யானை தனது முதற் சூலினை யீன்று மூங்கிலைத் தின்னும் தன் யாக்கையினைத் தன்பால் விருப்பம் மிக்க தனது ஆண் யானை தடவிக் கொண்டிருக்க வாழைகளையுடைய அழகிய அப்பக்கமலையில் துயிலும் சாரலையுடைய மலைநாடனாகிய அத்தலைவனது மென்மையை உடைய மார்பினை நாம் அவர் சேருந்தோறும் சேருந்தோறும் வருந்த முகந்துகொண்டு நம் மார்பின்கண்ணே அடங்கியிருப்பேன் அஃதிப்பொழுது கழிந்ததே.

*மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார்.*

## 329. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது. பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.]

தோழி! நம்முடைய காதலர் எனது அழகியகண்ணும் நெற்றியும் பசலையுறத் துன்பம் மிகுந்து இங்கே நான் வருந்தாநிற்கவும் நம்மைப் பிரிதலைத் துணிந்து தனித்து வாழ வன்மையுடையராயின், தலைகூம்பிய குடிசைக ளாகிய அழகிய குடியிருப்புக்களையுடைய சிற்றூரின்கண் பொருந்திய மணியொலிக்கப் பகுத்தல் பொருந்தி உப்பு வாணிகர்கள் வளைந்த நுகத்திலே செவ்விய கயிற்றினாற் பிணிக்கப்பட்ட வண்டியிழுக்கும் எருதுகள் வருந்தியிழுக் கும் கொடிய இடங்களில் எழும் புழுதியைத் திரட்டி வீசுங் காற்றுச் சுழற்றும் சுரநெறியில் சிறிது தங்கியிருந்து பிறகு பாய்தல்கொண்டு நேர்மை பொருந்திய முதுகினை நெளிக்கும் குறுகிய வரிகளையுடைய புலிக்குட்டி நீண் டுயர்ந்த நல்ல யானை நீர்வேட்கையால் சுனையின்பால் இட்ட கையினைக் கடித்து முழங்கும் இடமாகிய முகில் துஞ்சுங் காட்டில் புலி நீரின்மையினாற் புகுந்து குட்டியை ஈனும் வறிய சுனையினையுடையதும், பனியுறைந்த உச்சி யினையுடையதும் ஆகிய பல மலைகளையுங் கடந்து அவர் போவரோ?

*உறையூர் முதுகூத்தனார்.*

## 330. நெய்தல்

[தலைமகனுக்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளுக்குக் குறை நயப்பக் கூறியது]

தோழி! மென்னிலமாகிய நெய்தலையுடைய நம் தலை வன் கழியில் உள்ள பூக்களைப் பறித்தும் கடற்கரைச் சோலையில் தங்கியிருந்தும் வரிப்பட்ட மணலில் வண்டற் பாவைசெய்து விளையாடியும் இன்பமுறப் பலகால் வந்து

கூடியும் சிறுமை தோன்றப் பணிதலைச் செய்தும் குற்றமில்லாத நம்முடைய துன்பத்தினை அறியாமையால் தளர்ந்த நெஞ்சுடன் தனது துன்பம் வெளிப்பட்டுத் தோன்றச் செல்லா நிற்பன்; அந்தோ!

அவ்வாறு செல்கின்றவன் சென்ற திக்கில் இரக்க முற்று முன்னே நின்று செல்லற்க என்று தடை செய்யச் சென்றதாகிய எனது உறுதியற்ற மனம் அத்தலைவனிடஞ் சென்று சேரவில்லையோ? சேர்ந்தும் நமது நாமத்தினைக் கூற நாணியதோ?

அவர் ஏறிச் சென்ற தேர் அங்கே தோன்றுதலைக் காண்பாயாக! வெள்ளி மணல் திரண்ட குவியல்களின் மேலும் மணல் மேட்டிடத்தில் உள்ள தாழை மடல்களி னிடத்தும் அழகிய அடுப்பின் பசிய கொடிகள் அரிபட ஏறியும் இறங்கியும் சிறிய குடிவாழ்க்கையை உடைய நெய்தல் மாக்கள் பெரிய கடலிற் செலுத்திய விரைந்து செல்லுதலையுடைய வளைந்த மீன் படகுபோல் உயர்ந்து தோன்றுந் தோற்றத்துடன் சென்று அப்பால் மறையா நிற்கின்றது.

*உலோச்சனார்.*

## 331. பாலை

[ தலைமகன் பிரிவின்கண் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

தோழி! நீண்ட நிலையாகிய அடிமரத்தினையும் சிவந்த தளிர்களையும் உடைய இருப்பை மரங்களின் தந்தத்தினைக் கடைந்தாற்போன்ற மிகுதியான வெள்ளிய பூக்களில் ஆடுகள் பரவினாற்போன்ற ஈன்ற பெண்கரடிகளின் கூட்டம் கிளைகளிற் பரந்துசென்று உண்ட மிச்சிலாகியவற் றைப் பசிய தளிர்களால் ஆகிய தழையுடையினை உடைய வேடப் பெண்கள் கணுக்கள் திரண்டு நீண்ட மூங்கிற் குழாயில் திரட்டிக் குன்றின் கண்ணவாகிய சிற்றூரின்

தெருக்கள்தோறும் சுழன்று விற்றுத் திரியும் அழகிய சிறிய ஊர்களையுடைய பல நாடுகள் பின்னே நீங்க;

எக்காலத்தினும் அரிய இசைத்துறைகளை முற்ற வுணர்ந்த கரிய தண்டினையுடைய சிறிய யாழைக் கொண்டுள்ள பாணர்கள் ஆரவாரஞ்செய்யப் பல அணிகலன்களை அளித்து நாளோலக்கம் கொண்டிருந்த கள்ளின் மகிழ்வினை யுடைய திதியன் என்பான், வேளிரோடு போர் செய்தற்கு உருவிய வாளின் வாயினையொத்த கொடுமையை உடைய வறண்ட சுரத்தினைக் கடந்து சென்றவராகிய நம் தலைவர் நம்பால் அன்பில்லாதவர் ஆவர்.

*மாமூலனார்.*

## 332. குறிஞ்சி

[இரவுக் குறிச் சிறைப்புறமாகத் தோழிக்குத்தலைமகள் இயற்பட மொழிந்தது.]

தோழி! வாழ்வாயாக. முளைகள் வளரும் தூறுகளில் உள்ள மூங்கில்களை ஒடித்துத் தன் சுற்றத்தோடு தின்ற நிறம் விளங்கிய களிறு நீர் விரும்பிச் செல்லுந் துறை யருகே தன்னுருவினைக் கண்டு தாக்குதற்குப் பதுங்கிப் போர் செய்யும் மாறுபாட்டினைக்கொண்ட புலியைப் போர் செய்து கொன்று, கூரிய முனையில் குருதி தோய்ந்த சிவந்த கொம்பினை மிகுந்த கழையால் கழுவிக்கொண்டு கல்முழை களையுடைய பக்க மலையில் மெல்ல மெல்லச் சென்று செற்றங்கொண்ட தன் பகையைத் தொலைத்த செருக்குடன் யாழ்போன்ற இசையினையுடைய ஆறு கால்கள் அமைந்த வண்டுகள் ஒலிக்கும்படி சென்று தன் பிடியினைக் கூடி வாழை மரங்களையுடைய மலையில் துயிலும் நாட்டை யுடைய தலைவன்:

நினது உயர்வுக்கு ஏற்ற மென்மைத்தன்மையன் என நீ அன்பால் உரைத்து, என் மனம் அமைதியுறக் கூறிய

இனிய மொழிகளெல்லாம் உண்மையாக முடிந்தன. தன்னை விரும்பியவர்கட்கு அமுதத்தைப்போன்ற இனிய நல்ல மாலையினையுடைய தன் மார்பின்கண்ணே வண்டு இடையிற் பொருந்த முடியாத செறிந்த முயக்கமும் நீங் காத காதலும் முதலிற் கண்ணுற்ற நாள்போலச் சிறந்து விளங்குகின்றன.

*கபிலர்.*

## *333.* பாலை

[ பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

தோழி*!* வாழ்வாயாக. யாமரத்தின் ஒள்ளிய தளிரில் அரக்குப்பொடியினைச் சிதறினாற்போன்ற நின் உடம்பினது மேனியின்கண் அழகிய பசலைபரக்க வருத்தம் மிகுதியும் உடையையாகி அவரிடத்தே பழியைச் சேர்த்தலை விரும்பு கின்றனை.

அங்கே நினது துன்ப மிகுதியை யாரேனுஞ் சென்று சொன்னால் அம்மொழிகளைக் கேட்டு, அவரால் துன்பந் தாங்கியிருத்தல் இயலுமோ*?* செய்யப்படும் பொருள் முற்றுதாயினும் இன்பப் பயன்கெடுமாறு அதனையே பெரி தாக ஆராய்ந்து அங்கே தாழ்த்துவிட்டார்.

வேனிற்காலத்தில் மேல்காற்றால் குருத்தானது இற்று உதிர்ந்த வருத்தம் நீங்காது துளையமைந்த துய்யையுடைய உச்சி கூம்பி வற்றிய இளம் பனைபோலக் கையை உயர்த்தி யானையின் பெருங் கூட்டம் முகிலை நோக்கிக் கதறுதலைச் செய்யும் மலையைக் கடந்து சேய்மைக்கண் சென்றன ராயினும் தாம் கூறிய காலவெல்லை பெயர்ந்திட நாட்கள் இடைப்படாமல் நம் தலைவர் வருவர்; என்று இவ்வாறு பயனை உண்டாக்குங் கொள்கையோடு இனிமை நீங்காது கூறும். நின்வாயின் இனிய மொழிகள் நல்ல உண்மையாக

வந்திடுவராயின் அது மிகவும் நல்லதே; அவ்வாறு வாராமல் நம் காதலர் அவ்விடத்தில் தங்குவாராயினும் தாஞ் சென்றுள்ள நாட்டிலே தாஞ் செய்யுந் தொழிலை முடித்துக் கொண்டு மீளும் எண்ணம் உடையவராயினும் அவ்வாறு மீண்டுவரும் பெரு விருப்பத்தோடு விடுக்கும் தூதுவரப் பெறுவோமாயின் இங்கே நமது பசலை மறைதல் எளிதாகும்.

*கல்லாடனார்.*

## 334. முல்லை

[ வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகனுக்குச் சொல்லியது.]

பாகனே! முகிலானது ஒலி முழங்குங் கடலின்கண் நீரை முகந்து எழுந்ததால் ஆகிய முழக்கத்தோடு கரிய பிடிகளின் கூட்டம்போன்று சேர்ந்து திரண்டு பெரிய களிற்றின் பருத்த கைபோலக் கால் இறக்கி வளைந்த முன் கையினையுடைய மகளிர் விரும்பி விளையாடும் கழங்கினையொத்த பனிக்கட்டியுடன் விரையுந் துளிகளைச் சிதறிப் பெய்தலைத் தொடங்கிவிட்டது.

முதுகிடாது வெல்லும் நல்ல வீரம் மிகுந்த ஏற்றினது தோலாற் போர்த்த வெற்றிகோண்ட முரசமானது இழுமென ஒலிக்கப் பகைவர் நாட்டினைத் திறையாகக் கொண்டோமாகலின் அழகிய நிறத்திணுற் பொலிவனவாய் மாறுபட்ட மையுண்ட கண்களையும் தழைத்த பலவாகிய கூந்தலையும் அழகிய சிறிய நெற்றியினையும் உடைய நம் தலைவியை இப்பொழுதே பார்த்தலுக்கு வானத்தின்கண் விளங்கும் சிறகினையுடைய அன்னத்தின் கூட்டம் பறந்து செல்லுதலைப்போல விரைந்து செல்லும் விரைவாற் காற்றெனக் கூறப்பெறும் குதிரைகள் நான் ஒருங்கே பூட்டப் பெற்ற கொடிஞ்சியை உடைய நீண்ட தேரின்மிருந்து

விரைவு தளராது கூட்டமாகிய மயில்கள் ஆடும் கார்காலத்தின் தன்மையுடைய பெரிய முல்லை நிலத்தே வலிய வட்டகையினையுடைய உருளைகள் ஈர நிலத்தினைக் கிழித்துச் செல்லுமாறு செலுத்துவாயாக!

*மதுரைக் கூத்தனார்.*

## 335. பாலை

**[தலைமகன் பொருள்கடைக் கூட்டிய நெஞ்சினைக் கழறிச் செலவழுங்கிறது.]**

நெஞ்சே! வறுமையால் மயக்கங்கொண்ட நெஞ்சின் வருத்தத்தைப் போக்குகின்ற அருளினை மிக உடையராயினும் கைப்பொருள் இல்லாதவர்களுக்கு ஈதலாகிய சிறப்பு இல்லாமற் போதலை யானும் அறிவேன் அதனால் பெற்றதென்? விரிந்த மலர்மாலையினையும் வெற்றி பொருந்திய முரசினையும் வெல்லும் போரினையும் உடைய, பாண்டியனது மாளிகைகளை உடைய முதிய ஊராகிய மதுரையின் மதிற்புறத்தினைத் தழுவி நீண்ட வெப்பத்தால் வருந்திய குறிய இறைகளமைந்த திரண்ட அடியினை உடைய கமுக மரத்தின் தொடுத்தல் அமைந்த பல மலர்களின் தொகுதியை மூடிக் கட்டிய குடையினையொத்த காய்த்தல் பொருந்திய எருத்தினிடத்துள்ள பாளை, பற்று நீங்கி யொழியப் புறத்தையடைந்து வாளை வடித்தாற்போன்ற வயிற்றினையுடைய பொதியின் கண்ணவாய பருவம் பொருந்திய இடத்தில் வெளிப்பட்ட இனிமை பொருந்திய அழகினையுடைய ஆரம்போலும் அழகு விளங்கும் புதிய பூக்கள் நீட்சிபொருந்திய கவரியின்கண்ணே வண்டு தேன் உண்ணுமாறு விரிய முத்துக்களைப்போன்ற வெள்ளிய பூக்கள் பரந்து பலகறையை ஒத்த ஒள்ளிய நிறத்தினையுடைய ஆலங்கட்டிபோல் மகிழ்ச்சியை மிகுதியும் உண்டாக்குஞ்

சிறப்புடன் அழகுமிக்க பூவொடு வளர்தலுற்ற முற்ருத இளங்காயினது நீரைக் காட்டினும் இனிமையுடைய வாகிக் கூரிய பற்களிடத்தே அமிழ்தம் ஊறுஞ் சிறந்த வாயினையும் ஒளிபொருந்திய வளையினையும் உடைய இளை யவளாகிய தலைவியை நாம் உடன்கொண்டு சென்ருல் களிற்றியானை தனது கொல்லுங்கோடு ஒடிந்திடப் பாய்ந்து சினம் மிகுந்து கொடிய வேனிலில் தனது இனிய துணை யாகிய பிடி உண்ணுமாறு பட்ட கிளைகளையுடைய யாமரத்தின் பட்டையைக் கிழித்து ஊட்ட வருத்தங் குடி கொண்டுள்ள நிலம் பிளந்த வெவ்விய சுரங்களும் நமக்குச் செல்லற்கு அரியனவல்ல.

*மதுரைத் தத்தங் கண்ணனுர்.*

## 336. மருதம்

**[ நயப்புப் பரத்தை இற்பரத்தைக்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது.]**

துளைபொருந்திய தண்டினையுடைய சேம்பினது கொழு வியமடலில் உள்ள அகன்ற இலையுடன்கூடிய பாசியினை யுடையநீர்ப்பரப்பில், குட்டியுடன்கூடியிருக்கும் உண்ணுமையால் வருந்தியபெண்ணுயின் வருத்தத்தை நீக்குதற்குக் காலைப்பொழுதிலே இரையினைக் கொணருமாறு எழுந்த நீர்நாய் வாளையைப்பற்றிப் போர் செய்தலின் நீர்த்துறை கலங்கினமையால் தெளிந்த கள்ளினைக் குடித்துப் பெண்கள் நுண்ணிய தொழில் நலம் வாய்ந்த அழகிய குடத்தினை வைத்துவிட்டுத் தம் கணவரின் நற்பண்பு இல்லாத பரத்தைமைகளைப்பாடி விரிந்தபூங்கொத்துக்களையுடையகாஞ்சி மரத்தின் நிழலிலே குரவையாடுதலைச் செய்யும் இனிய பெரிய பொய்கையின் துறை பொருந்திய ஊரையுடைய தலைவனது தேர் கொண்டுவரவந்த பரத்தையராகிய நேரிய

அணிகளையணிந்த மகளிர் என் அழகினை ஏசுகின்றனர் என்பர்.

அச்செயல் பாகன் நெடுங்காலம் உயிரோடு வாழ்தல் மிகுந்த சினத்தினையும் கொல்லுங் குணத்தினையும் உடைய களிற்றியானை அவனைக் கொல்லாது அருள் செய்தலால் ஆவது போலும்;

அப் பெண்களும் பிறரும் சிறப்புடையவர்கள் போலச் செல்லுதல் முழவு ஒலிக்கும் துணங்கைக் கூத்தையாடும் விழாக் காலத்திலே யான் அவ்விடத்திற்கு வாராமையால் ஆகியதே.

யான் அவ்விடத்திற்கு வந்தால் ஞாயிற்றின் செல்கையை நோக்கிச் சுழலும் நெருஞ்சிப் பூவைப்போல அவர்களை யான் செல்லுமிடமெல்லாம் என்னொடு திரியச் செய்வேன். அவ்வாறு செய்யேன் ஆயின் வெற்றி பொருந்திய வேலினையும் மழைபோன்ற அம்பினையும் முகில்போன்ற தோற்கிடுகினையும் உடைய சோழரது விற்படை நெருங்கிய அரணையுடைய வல்லத்துப் புறத்தேயுள்ள காவற் காட்டின்கண் வந்தடைந்த ஆரியரது படை போல எனது நேரிய சந்தினையுடையமுன் கையில் திரண்ட வளையல்கள் சிதைந்தொழிவனவாக.

*பாவைக்கொட்டிலார்.*

## 337. பாலை

[ முன்னொரு காலத்துப் பொருள் வயிற் பிரிந்து வந்த தலைமகன் பின்னும் பொருள்கடை கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.]

நெஞ்சே! பக்கமலையின்கண் யாமரத்தின் உயர்ந்த கிளையில் மாரிக்காலத்தே தளிர்த்த குளிர்ந்த தளிரையொத்த மேனியினையும் பெரிய மதர்த்தகண்களையும் உடைய தலைவி னிமையுற்றுப் பிரிந்திருக்க இவ்விடத்துப் பிரிந்து தங்கி

யிருத்தல் இனியது அன்று ஆகலான் அவளுள்ள இடத்திலே இருப்பதே பொருள் ஆவதாக என்றும்; நடுக்கத்தைத் தரும் இருளில் மிகுந்த ஆரவாரமுடைய மழை பெய்தமையால் பெரிய குளிர்கொண்ட வாடையால் அவள் வருந்துவள் என்றுங்கூறி, உப்புவாணிகரது கூட்டமாகச் செல்லும் கழுதை நிரைபோன்ற பாறைகளின் வழியே பலகாலுந் தூதுசெல்லும் பார்ப்பான், வெள்ளிய ஓலைச் சுருளுடன் வருகின்ற இயல்பினைப்பார்த்து உண்ணுமை யால் வாடிய விலாவினையுடைய இவன் கையில் உள்ளது பொன்னுதலுங் கூடுமென எண்ணிப் பயனில்லாமல் அப் பொழுதே கொன்று வீழ்த்திய கையிற் படையினையுடைய கொடுமையை உடைய மறவர் உடுக்குங் கூறுபாடு இல் லாத கந்தையை உடுத்திருக்கும் வறுமையைப் பார்த்துக், குருதியாற் சிவந்த கோலாகிய அம்பினையுடைய அவர்கள் கையை நொடித்துப் புறம்போக; நீள ஒழுகிய குருதி யுடன் தொங்கிக் கிடந்த குடலைக்கடித்து வரிகளையுடைய மரலுள்ள நெறியில் ஓர் ஆண்நரி வெள்ளிய பரற்கற்கள் மின்னும் கண்ணொளியைக் கவரும் கவர்த்த நெறியின்கண் கள்ளி நிழலினிடத்தே கூக்குரலிட்டுத் தங்கியிருக்க, மழை பெய்யாதொழிந்த வெப்பமிகுந்த காட்டுவழியாகிய அரிய இடத்தே முன்பொருகால் யாம் தமியேமாக நீ மீண்டு வந்தாயன்றே.

*பாலைபாடிய பெருங்கடுங்கோ.*

## 338. குறிஞ்சி

**[ அல்ல குறிப்பட்ட தலைமகன் தன்னுடைய நெஞ்சிற்குச் சொல் லியது. ]**

நெஞ்சே! மலைகள் உயர்ந்த இவ்வுலகில் சிறப்பித்துக் கூறும் நாட்டினையுடைய வீரம்மிகுந்த படைகளை வைத் திருக்கும் பெரிய அரசர்களும் அறத்தினைக் கைக்கொண்ட

செங்கோல் ஆட்சியுடன் பகைவரது போர் செய்யும் தறுகண்மையைக் கெடுத்து வளர்ந்த வெற்றிமிக்க திண்ணிய தோளினையும், பலராலும் புகழப்பெறும் திருவினையும் உடையோனாகிய பசும்பூட் பாண்டியனுடைய தெய்வங்கிலை உயர்ந்த நிலையினைப்பொருந்திய பொதியிலின் பக்கமலையில் உள்ள கிளைத்தஒளிபொருந்தியகாந்தட்பூப்போலமணக்கும் நல்ல நெற்றியினையும் அளவொத்து நீண்ட கூந்தலையும் உடைய மாமை நிறத்தினளாகிய தலைவியிடத்தில் அவளது நுண்ணிய திரண்ட விளக்கத்தையுடைய வளையல் நமது வளமை பொருந்திய முதுகினைச் சுற்றிக்கொள்ள முயங்குதல் நமக்குக் கிடைக்கமாட்டாதாயினும், பகைவரது நாடு பாழ்பட அழிக்கும் பகைவரால் கிட்டுதற்கரிய வலியினையுடைய வெற்றிபொருந்திய வேலினையுடைய சேரனது அகன்ற கரிய காட்டினையுடைய கொல்லிமலைபோல் எப்பொழுதும் வேட்கையுற்ற நெஞ்சத்திற்கு ஓர் உசாத்துணையாக நட்புக்கெடாது நிலைபெறுவதாக.

பகைவர் விண்ணுலகத்தை எய்துமாறு உருவிய திண்ணிய பிடியினையுடைய ஒளிபொருந்திய வாளமைந்த கையை உடையவனும், ஈன்ற அணிமையுடைய பசுக்களைக் கவர்ந்துவரும் வெட்சி வீரர்களுக்குத் தலைவனானவனும், திரண்ட போரினை மேற்கொண்டு வெல்பவனுமாகிய சோழனது பண்டங்கள் நிறைந்த பாக்கத்தின்கண் சென்று மீளல் அமையாத முழங்கும்பெரிய கடலின் பெரிய துறையிடத்துள்ளே அலைகளினும் பலவாக அவளிடத்து விடும் தூது ஒழியாது செல்வதாக.

*மதுரைக் கணக்காயனார்.*

## 339. பாலை

**[ போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]**

விரைந்த குதிரைகள் பூட்டப்பெற்ற மிகுந்த விசையை உடைய நெடிய தேரின் வலிய ஆரினைக் கொண்ட உருளை

ஆழ்ந்து செல்லும் சுவட்டில் பாம்புபோல வேகமாகச் செல்லும் நீர் ஓடவும் குவிந்து பற்று நீங்கின விரல்கள் போல் பயற்றுச் செடியில் காய்கள் முற்றவும் பொழுது பனிப் பருவமாகப் பொருந்தியது.

தாளாண்மைபற்றி யெழுந்த தளர்தலில்லாத நெஞ்சின் கண் உள்ள ஆண்மை முன்னே இழுக்கவும் காமமானது பின்னே நின்று தடுக்கவும் அவற்றால் இருபாற்பட்ட நெஞ்சமே! நாம் கணுக்களில் தீப்பற்றி யெரிதலின் இரு தலையுங் கொள்ளியினையுடைய ஒரு புழற்றட்டையின் உள்ளே நின்று வருந்தி ஒரு பக்கத்திலேயுஞ் செல்ல முடியாது தடுமாறும் எறும்பினைப் போன்றுள்ளோம்.

உடலோடு உயிர் ஒன்றினால் ஒத்த நட்பினையும், அவ்வுயிர் இன்புற்று வாழ்தல்போலும் காதலையும் உடைய, அதற்குச் சாதல் போலும் துன்பினைத் தரும் பிரிதல் அருமையை உடைய நம்முடைய தலைவி வருந்தியிருப்பாளோ? மிகவும் இரங்கத்தக்காள்.

*நரைமுடி நெட்டையார்.*

## 340. நெய்தல்

**[ பகற்குறிக்கண் தோழி தலைமகனுக்குச் சொல்லியது.]**

பூக்கள் பொருந்திய கடற்கரையையுடைய தலைவனே! என்றுங் கெடாத நல்ல சீர்த்தியினையும் பொற்பூணினையும் உடைய திரையன் என்பானது பல பூக்களமைந்த பொழிலினையுடைய பவத்திரி என்னும் ஊர் போன்ற இவள் தனது நல்ல அழகுவாய்ந்த இளமைப் பருவந் தொலையுமாறு வழியானது கழி ஒல்லென்னும் ஒலியுடன் நீர் பெருகப் பெற்றுள்ளது. மேலுங் கூரிய பற்களையுடைய பாம்போடு சுறுமீன் திரியப்பெறும்பொழுது ஒரு

தலையாக மயங்கியது. இவ்வாறாகவும் நம்முடைய தலைவர் சென்றுவிட்டனரே, என்றுகூறி நின்னிடத்துக் கொள்ளுந் துன்பம் ஒழிய ;

திண்ணிய படகுடன் சென்று பகலிலே மீன் பிடிக்குந் தொழிலை மேற்கொண்ட வலிய செயலையுடைய மீன் பிடிப்போர் கடிய காற்றின் மிகுந்த விசையுடன் செல்லுதற்கண் கொலைத் தொழிலையுடைய சுறுமீன்கள் ஒருங்கே பாய்ந்து கிழித்த வளைந்த முடிகளைக்கொண்ட நீண்ட வலைகள் தொழில் ஒழிந்து குளிர்ந்த கடலினின்றும் அசைந்து வரும் காற்று வீசுந்தோறும் மனை முற்றங்களில் உள்ள தாழைமரத்தின்மீது கிடந்து அசையாநிற்கும். தெளிந்த கடற் பரப்பினையுடைய எமது உறைதற் கினிய ஊரின் கண் ; நீ இன்று எம்மிடத்தே தங்கிச் செல்லின் வருங் குறை யாது ?

பசிய மீனை விற்று மாற்றிய வெண்ணெல்லின் மாவைத் தயிரிட்டுப் பிசைந்த கூழினைக் குதிரைகள் உண்பனவாகும் நினக்கு வட நாட்டில் உள்ளார் கொணர்ந்த வெள்ளிய நிறத்தினையுடைய வட்டக்கல்லில் குடமலையாகிய பொதியின் சந்தனக்கட்டையால் பிற மணப் பொருள்களையுங் கூட்டி யுண்டாக்கிய வண்டுகள் ஒலிக்கும் நல்ல சாந்தினை யணிவிப்போம்.

பலநாளும் உன்னுடைய வருத்தம் நீங்கப் பகற் பொழுதிலே வந்து புன்னை மரங்களையுடைய அழகிய சோலையின் இனிய நிழலில் பொழுதைக் கழித்து மாலைப் போழ்து வர அதனை மயக்கந் தோன்றப்பார்த்து நின்பாகன் தேரினைப் பூட்டுதலை ஆராய்ந்து அழகிய அத்தேரினைச் செலுத்த நீயுஞ் செல்லுதற்கு விரும்புதலை ஒழிவாயாக.

நக்கீரர்.

## 341. பாலை

[ பிரிவின்கண் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

தோழி ! கோங்கும் மெல்ல மெல்லக் கொய்யப் பெறும் தளிர்களை யெய்தின. குயிலுந் தேன் பெருகும் மா மரத்தில் உயர்ந்த கிளையில் இருந்து கூவும்; நாடுகள் நிறைதற் கேதுவாகிய காவிரியின் கரையைப் பொருந்திய மிகுந்த பெருக்காகிய ஓடக் கோல் மறையும் வெள்ளம் வற்றிய பின்னுளில் மழை பெய்து கழிந்தாலொத்த பெரிய வாய்க்கால்களிற் றங்கிய [illegible] அறுகம்புல்லாகிய உணவினைத் தின்ற அசையுங் கொண்டையினையுடைய நல்ல ஏறுகளும் வலிமையுடைய நாவினுல் தளர்ச்சி நீங்கக்குடித்துக் குறிய அடியினையுடைய காஞ்சி மரத்தின் மாலைபோன்ற மெல்லிய பூங்கொத்துகளினின்று உதிரும் பொன்னின் அழகுடைய நுண்ணிய பொடிகள் மேலே உதிர்ந்திட ஒன்ருகக்கூடி நெடிய மணலின் குப்பையாகிய மேட்டிலே துயிலும்.

இவ்வாருகிய இக்காலம் சிறந்த இன்பத்தை நுகரும் துணையினைப் பக்கலில் உடையார்க்கு அழகிய வேனிற் பருவமாகும் அதனுற் பெற்ற தென்னை ? துணையைப் பிரிந்துள்ள நாம் உய்யுமாறு இல்லையே !

*ஆலூர் மூலங்கிழார்.*

## 342. குறிஞ்சி

[அல்ல குறிப்பிட்ட தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது,]

நெஞ்சே! தெற்கின் கண்ணே உள்ளதாகிய போர் வெல்லும் பாண்டியரது நல்ல நாட்டிலுள்ளதாகிய மண்ணுலாகிய புற்றினையுடைய காட்டரணின் இடத்தைத் திறத்தலோடு பகைவர் ஆக்களைக் கவர்ந்து கொள்ளும்

பழைய ஊரினராகிய கள்வர்களுக்கு முதல்வனும், ஏவுதலைச் செய்யும் வீரர்களுக்குத் தலைவனும் பகைவர்களது அரிய அரண்களை அழித்த வலிமையுடன் பருந்துகள் வந்து கூடப் பகைவர்களுடைய பலபோர்களையும் வென்ற இடியுடன் மாறுபடும் பெரிய கையினையும் என்றுங் கெடாத நல்ல சீர்த்தியினையும் உடையானாகிய பாண்டியனது தோண்டப்படாத அருவி வீழும் பொய்கையினையுடைய மலையின் குகையில் மறைந்த வரையர மகளிர் போல அரியளாகிய அழகிய வரிகளையுடையவளாகிய தலைவி நம்மை அணையப்பெறாத விடத்து; உன்னை வன்சொற் கூறி ஒறுக்கவும் ஒழிவாய் அல்லை. இனிய மொழிகளை இயம்பி நிறுத்தவும் நிற்பாயல்லை. உனக்கு யான் உறவினன் அல்லனோ? உள்ளம் ஒன்றிய நண்பரைப்போல யான் கூறுவதனைப் போற்றுவாயாக.

*மதுரைக் கணக்காயனார்.*

## 343. பாலை

**[தலைமகன் இடைச்சுரத்தில் மீளக் கருதிய நெஞ்சினைக் கழறிப் போயது.]**

என் நெஞ்சே! நீ வாழ்வாயாக. கள்ளாலாகிய மகிழ்வைப் போல மகிழ்தற்கு ஏதுவாகிய செவ்வரி படர்ந்த மதர்த்த குளிர்ந்த கண்களையும் சிலவாகிய மொழிகளாற் பொலிவு பெற்ற பவளம் போன்ற வாயினையும் பலவாகிய மாண்புகளையும் உடைய நம் தலைவியைப் பிரிந்து வந்த நீ;

வண்டியினைக் கொண்ட உப்புவாணிகனது பெயர்ந்து செல்லும் உருளின் பொலிவில்லாத பூண் சிதையச் செய்த வலிய பாறையில் உள்ள நடுகல்லின் இடப் பெற்ற மாலை வாடப்பெற்றதும் நீராட்டப் பெறாததுமாகிய இடத்தில் கூரிய உளியாற் செய்யப்பட்ட கீற்றுக்கள் மறைந்த

எழுத்துக்கள் அவ்வழியிலே செல்லும் புதியர்க்கு வேறு பொருளினவாகப் பிறழ்ந்து காணப்படும் இடங்கள் பொரிந்த கவர்த்த நெறிகளையுடைய காடாகிய அங்குள்ள அகன்ற இடத்தின் கண்ணே, யாமரத்தின் அழகிய தளிர் களையுடைய பெரிய கிளைகளின் இல்லின் கண் இருப்பது போன்ற நீழலில் தாம் வந்த வெயிலின் வெப்பம் ஒழிதற்கு நீண்ட செவியினையும் குறிய காலினையும் உடைய ஆண் கழுதையின் புறத்தே நிறைத்துள்ள பண்டங்களின் பாரத் தாலாகிய தளர்வினைப் போக்கியவராகி, மீண்டும் புறப்ப டாதவர்க்கு உசாவியிருக்கும் வழித்துணையாகி மிகுந்த முயற்சியினை விரும்பி நின்றனை; ஆயினும் இப்போது வளைந்த மூங்கிலைப் போன்ற மிக்க இறையினையுடைய பெருத்த தோளினையும் சிலவாகிய தேமலை யணிந்த பல பூண்களையுடைய மெத்தென்ற முலையினையும் உடைய தலைவியின் நல்ல அழகிய உடலினைத் தழுவுதலை விரும்பி மீண்டு நின்று இம் முயற்சியினைக் கைவிட நினைத்துள்ளாய் இது தகுமா?

*மதுரை மருதனிள நாகனார்.*

## 344. முல்லை

[வினை முற்றிய தலைமகன் தேர்ப்பாகனுக்குச் சொல்லியது.]

தேரைச் செலுத்துதலில் கைதேர்ந்த பாகனே! நீ வாழ்வாயாக. பசலையுற்ற துன்பம் வருத்த வருந்திய அன்பு மிகுந்த இனிய காதலியின் நகையுடன் கூடிய முகத்தினையுடைய;

வளந்தரும் மழை சொரிந்த வெள்ளிய நிறத்தினை யுடைய களர் நிலமாகிய காட்டில் வீசும் குளிர்ந்த காற்று மிகுதிப்படுந்தோறும் நிலவொளி என்னுமாறு தொக்க அரும்புகள் விரிந்த வளைந்த அடியினையுடைய பிடா மத்ர

தின் கண்ணே கூரிய அழகிய வெள்ளிய பற்களையும் ஒளி தங்கிய நெற்றியினையும் உடைய மகளிரது ஒழுங்கு மாட்சிமைப்பட்ட தோளி என்னும் விளையாட்டைப்போல் மெல்லென மயிற் கூட்டங்கள் சுற்றும் அடர்ந்த காட்டு வழியில் இருள் வருவதற்கு முன்பாகவே விரைந்து கழலாகிய ஒலிக்கும் நாவினையுடைய தெளிந்த மணி யொலிக்க, ஒளியின் தழைத்தலை யொத்த நிமிர்ந்த செலவினையுடைய குதிரைகளைக் கடிவாளத்தினை ஆராய்ந்து செலுத்தி விளக்கமுறுங் கொடிஞ்சி பொலிவுற்றுக் காண இவர்ந்து தேரினைச் செலுத்துவாயாக !

*மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார்.*

## 345. பாலை

[தோழிக்குத் தலைமகள் சொல்லியது]

தோழி! வானந் துளியைச் சொரிந்து வெப்பமொழிந்து குளிர்ந்த நிலைமை எய்துதலின் எம்மையும் உடன்கொண்டு செல்வாயாக என்று கூறி நாம் பல முறையும் உடன் செல்ல விரும்பி வேண்டினேமாக; மிகுந்த புகழ் வாய்ந்த கொற்றவை அருள் கூர்ந்து அளித்தலின், வெள்ளிய காலினையும் பல படையினையும் உடைய குதிரைகளை யடைந்த பழமையான புகழினையுடைய மிக நுண்ணிய செய்யுட்களை இயற்றிய புலவரால் பாடப் பெற்ற கூட்டமாகிய முகில்கள் தவழும் ஏழில் என்னுங் குன்றத்தின்கண் உள்ள கரிய அடியினை உடைய வேங்கை மரத்தின் சிவந்த பூக்களால் ஆகிய மாலையை அழகியதாய உயர்ந்த அல்குலில்யாம் அணிந்து மகிழும் பருவமாகிய சில நாள் கழிக என்று முற்காலத்தே நம்பால் பொய்கூறிச் சென்று விட்டாராயினும்,

அசையுங் காற்றினால் தளரும் நிலைவாய்ந்த இற்றி மரத்தின் ஒன்றுகித் தனித்த நீண்ட விழுது மலையின் இடத்தி

லைத் துடைக்கும் சுர நெறியிற் பொருந்திய வெயிலின் பொருட்டு நிழலின் கண் தங்கினராகிச் செலற்கு;

தம்முடனே திருந்திய வேலினை யுடைய ஏவலாளரும் வண்டுகள் உண்ணும்படி தரித்துக்கொள்ளுதற்குச் சிறந்த தளிர்களை யீன்று மரத்தின் கொம்புகள் தளிர்க்குமாறு மழை பெய்து நீங்கிய பிறகு குன்றுகளின் இடத்தவாய சிறிய வெள்ளிய அருவிகளின் நீர்த்துளியால் மலர்ந்த கரிய அடியினையுடைய நுணாமரத்தின் பெரிய கிளைகளிற் பூத்த வெள்ளிய பூக்கள் சிவந்த மணலையுடைய சிறிய வழி களிலே கம்மென்று மணக்குமாறு உதிர்ந்து அழகு செய் யக் காடு அழகு பெறுவதாக,

*குடவாயிற் கீரத்தனார்.*

## 346. மருதம்

**[தோழி தலைமகனுக்கு வாயில் மறுத்தது]**

மழைக் காலத்தே இறப்பின் மேலுள்ள சுதை பூசிய குளிர்ந்த மேலிடத்தை யொத்த இறகினை யுடைய குறுகக் குறுகப் பறக்கும் கொக்கின் சேவலானது வெள்ளியால் ஆய வெள்ளிய இதழ் போன்ற கயல் மீனைப் பெறல் கரு திக், கள்ளினையுண்ட மகிழ்வாலாகிய மிகுந்த செருக்கினைக் கொண்ட உழவர் காஞ்சிமரத்தின்குறிய துண்டுகளை நட்டு, இனிய சுவையுடைய மெல்லிய தண்டினைக் கொண்ட கரும்பின்சிறந்த பலகழிகளைக் கட்டிக் குறுக்கே வைத்து அடைத்துப் பெரிய நெற்பயிரையுடைய செய்யா கிய பசிய பள்ளங்களில் நீரைத் தேக்கி வருத்தமுற்று இயற் றிய வலிய இடத்தினையுடைய வளைந்த அணையின் மேலே தேங்கி வழியும் கடிய நீரினைப் பார்த்து மெல்ல மெல்லச் சென்று நோக்கியிருக்கும் பயன் பொருந்திய ஊரினையுடை யவ்வனே!

நீ நினது பண்ணின் திறம் அமைந்த நல்ல யாழினை யுடைய பாணனுடன் இறுகிய கட்டினையுடைய மார்ச்சனை அமைந்த முழவின்கண்கள் முழங்கியொலிக்க மகிழ்ச்சியுற்ற நினக்குத் துணையாகிய சுற்றத்துடன் கள்ளுண்டு எமது வீட்டின் கண் வாராதொழிந்து முன்னை நாளில் நுமது மனையாகிய அப்பரத்தை இல்லின்கண் சேர்ந்திருந்த பொழுது, அம்மனையில் உள்ள சிறிய தொடியினை அணிந்த நின் பரத்தை நீண்ட தேரினையும் இழையை அணிந்த யானையினையும் உடைய பழையன்மாறன் என்பவனை. மாடங்கள் மிகுந்த தெருக்களையுடைய கூடலாகிய அங்கே மிகுந்த படையுடன் வேற்றுப்புலத்தே போர் செய்ய வந்து தங்கி யிருந்த கிள்ளிவளவன் நல்ல போரின்கண் சாய்த்துக் கடிய செலவினையுடைய குதிரைகளுடன் பல யானைகளையும் பற்றிக்கொண்டு பகை மன்னரது ஊரினைப் பிடித்துக் கொள்ளக் கோதைமார்பன் என்னும் சேரன் எய்திய மகிழ்வினும் பெரிதாக மகிழ்ந்தனள் அன்றோ ? நாங்கள் அதனைக் கருதியது இல்லை. அவ்வாறாகவும் நீ மறுப்பது மிகுந்த நகையை உண்டாக்குவதாகும்.

நக்கீரர்.

## 347. பாலை

[ தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

தோழி வாழ்வாயாக! மழை பெய்யாது மறைந்து ஒளித்தமையால் மூங்கில்கள் வாடிய பக்க மலையில் ஒள்ளிய நிறமுடைய வலிய புலி பாய்ந்ததாக. திரண்ட அடியினையும் வெள்ளிய கொம்பினையும் உடைய களிறு முழக்கிய ஒலியினைக் கேட்டுப் பயந்து, தன் கன்றினைவிட்டு ஓடிய புல்லென்ற தலையினையுடைய இளைய பிடியானை, கையைத் தலைமீது வைத்துக்கொண்ட மயக்கந் தங்கிய விரைவுடன் தம் மகவினைக் காணாதொழிந்த பெண்டிர்போல அக்கன்றி

னைத் தேடித் திரியும் நீண்ட மரங்களையுடைய பக்கம் அமைந்த மலையைக் கடந்து சென்றவராகிய நம் தலைவர்;

தோள்கள் பழைய அழகு கெடவும் ஒவ்வொருநாளும் அழகினைக் கவர்ந்து கொள்ளும் பசலையானது அருளுதலின்றி வருந்தவும், நிறைந்த பெரிய படையினையுடைய நெடுஞ்சேரலாதன் என்பான் பெரிய கடலின்கண் பகைவர்களை ஓட்டி அவர்களுடைய காவல் மரமாகிய கடம்பினை அறுத்துச் செய்த பண்ணுறுதல் அமைந்த முரசினது கண்ணு முழங்கினாற்போன்ற மூதூரின்கண் புறத்தினைத் தூற்றும் கொடிய வாயினையுடைய சேரிப்பெண்டிரது அம்பலும் அலரும் நம்மிடத்தே தங்கியிருக்கவும் நம்மைப் பிரிந்து சென்றாராயினும் அவர்க்குச் செய்யும்வினை கைகூடுவதாக.

*மாமூலனார்.*

## 348. குறிஞ்சி

[ தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியது.

முற்றத்தின்கண் உள்ள தேன் மணத்ததும் சுவையினைக் கொண்ட திரண்ட அடியினையுடைய மாமரத்தின் கோடைக்காலத்தே முதிர்ந்து நன்மணங் கமழும் இனிய கனிகளுடன் பிசினையுற்ற பலவினது ஒளிபொருந்திய சுளைகளையிட்டுத் தேனுடன் கூட்டியாக்கிய வண்டு மொய்க்கும் அரியலாகிய அசையும் மூங்கிலின் நீண்ட கணுவிடையுள்ள குழாயில் நெடிதிருந்து முதிர்தலின் கடிய வேகங்கொண்ட பாம்பினது வெகுட்சியை யொத்த கள்ளினை, உயர்ந்த மிமையத்தையுடைய தெய்வம் உறையும் உயர்ந்த மலைக்குப் படைத்துப் பின் தளிரால் ஆகிய தழையுடையணிந்த மகளிர் உண்பிக்கப் புனங்காக்கும்

குறவர் அதனையுண்டு பக்கமலையில் உள்ள பெரிய தினைப் புனங் காவலை மறந்த விடத்து யானைகள் தினைப்புனத்தைக் கவர்ந்து உண்டனவாக. அதனைப் பொருது இளையரும் முதியரும் ஆகிய சுற்றமெல்லாம் ஒருங்கே கூடி வில்லை ஆராய்ந்து கொண்டு திரியும் நாட்டையுடையோனாகிய நம் தலைவனது உறுதியல்லாத இனிய சொல்லை மெய்யெனத் தெளிந்த நெஞ்சமே! இனி நமக்கு யாது தீங்கு நேருமோ?

*மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார்.*

## 349. பாலை

**[ தலைமகன் பிரிவின்கண் தோழிக்குத் தலைமகள் சொல்லியது ]**

தோழி! பொருளின் அளவையறிந்து கொள்ளும் கருவியாகிய துலாக்கோலைப்போன்ற குற்றமற்ற உண்மை மொழியினையுடையவனாகிய வறுமையால் அழிந்த சுற்றத் துடன் பாணர் முதலியோர் சென்றால், ஊக்கம் மிகுந்த நெஞ்சத்துடன், பகைவருடைய போர்முனை பாழ்பட அவ ருடைய அரிய அரணைத் தொலைத்துக்கொண்ட விலைமிக்க அணிகலன் முதலாகிய செல்வங்களை, அப்பாடுநர் தகுதி முதலியவைகளை ஆராயாது மிகக் கொடுக்கும் நன்னன் என்பவனுடைய நல்லநாட்டின்கண் உள்ள ஏழில் என்னும் மலைச் சாரலில் நன்னிறம் பொருந்தச் செவ்விதாகிய அடி மரம் உயர்ந்த கரிய அடியினை உடைய வேங்கை மரத்தின் தீயை ஒத்த பூக்களாகிய உணவினை உண்டு ஆண்யானை தனது வரிகள் தங்கிய நெற்றியில் வைத்த வலிமை குன் றிய பெரிய கை குன்றத்தே ஏறும் பாம்புபோலத் தோன் றும் மொழி வேறுபட்ட நாட்டின் இடத்தவாகிய சுரநெறி யைக் கடந்து சென்றோர் அரத்தாற் பிளக்கப்பட்ட அழ கிய வளைகள் செறிந்த முன்கையினைத் தாம் வரைந்து

கொண்டு பற்றியதால் ஆகிய பழைய அழகுகெட என்ன பொருளை எண்ணினரோ?

மாமூலனார்.

## 350. நெய்தல்

[பகற்குறி வந்து நீங்குந் தலைமகனுக்குத் தோழி சொல்லியது.]

பெரிய கடற்கரையை உடைய தலைவனே! கழியிடத்தே சிறிய பூங்கொத்துக்களையுடைய நெய்தற் பூவும் கருங்குவளைப்பூவும் குவியக் கடல்வீசும் திரையைத் தருதல் அமையாது துறையின் பக்கத்தே நீண்ட பெரிய கவர்த்த கோட்டினையுடைய கரிய சேற்றின்கண் உள்ள ஈரமுடைய வளையில் இருக்கும் நண்டு மேலே வெளிப்பட, செல்வோர் இல்லாமையால் ஒலி அடங்கியது,

விளங்கும் பெரிய கடற்பரப்பில் எறியுஞ் சுறாமீனை ஒதுக்கி வலம்புரியின் முத்தினை மூழ்கியெடுத்த பெரிய படகினையுடைய பரதவர் ஒலியைத் தன்னிடத்தேயுடைய சங்குகள் கல்லெனை ஆர்க்கும்படி ஆரவாரம் மிக்க கொற்கையோர் எதிர்கொள்ளுமாறு படகில் இருந்து இறங்கும் திரண்ட மணலையுடைய நீண்ட கரையாகிய அவ்விடத்தே எமது சிறிய நல்ல ஊர் உங்கே தோன்றாநிற்கும் காண்பாயாக!

வளைந்த நுகத்திற் பூட்டப் புகுந்த திரண்ட காலினையுடைய கோவேறு கழுதையை வடித்த மணியினையுடைய நீண்ட தேரினிற் பூட்டும்படி நின் பாகனுக்கு ஆணை செய்யாது மிகுந்த அழகுபொருந்திய குளிர்ந்த கண்ணினையுடைய இவள் காரியமாக இன்று இரவு இவ்வூரில் தங்கிச் செல்வாயாக.

சேந்தன் கண்ணனார்.

## 351. பாலை

[ பொருள் முற்றி மறுத்தரா நின்ற தலைமகன் நன்னுடைய நெஞ்சுக்குச் சொல்லியது ]

நெஞ்சே! வேறு நாட்டிற்குச் சென்று தங்குதலை விருப்பம்மிகக் குறிக்கொண்டு பெறுதற்கரிய சுற்றத்தார் பின்வந்து விடைதரப் போந்து பொருளையீட்டிய விருப்பு மிகுந்த நெஞ்சினுடன் முடிக்கப்படும் வினையைச் செய்து முடித்தமையால் ஆகிய நிறைவுடன் கூடிய இனிய செலவினை;

ஞாயிற்றின் கதிர் வெதுப்ப கழன்ற இலைகளை உதிர்த்த காற்று அலைக்கும் தாழ்ந்த கிளைகளில் தீ கப்புவிட்டாற் போன்றஅழகிய தளிர்களையுடைய மரச்செறிவில் உட்டுளை பொருந்திய பூக்களையுடைய பொலிவற்ற இருப்பை மரங் களையுடைய காட்டுநெறியில் யான் மீளும் எண்ணம் உண்டை யேனுகி வந்துகொண்டிருக்கவும்;

சுழித்த செய்குறியாகிய வட்டத்தை நாள்தோறும் எண்ணி அவை எழுதப்பட்ட சுவர் நனைதற்கு ஏதுவாகிய அழுதலால் நீண்ட குளிர்ந்த கண்களில் இருந்து விலகி விழும் ஐதாகிய நீரானது காதில் அணிந்த பொற்குழையில் தெறித்து விழத் திருந்திய அணிகளையுடைய முன் கையைக் கவுளிற் பொருந்தவைத்து அணையின்மீது இருந்து பின் படுக்கையிற் கிடத்தல் பொருந்தியவிடத்து வருந்தும் தோளின் வருத்தத்தைப் போக்கும் மருந்து இஃதென நினைக்குந்தோறும் ஒலிக்கும் பல்லியானது நிமித்தத்தைப் பரவியிருக்கும் தலைவின் காதினிடத்தே அறிவுறுத்துமோ?

*பொருந்தில் இளங்கீரனுர்.*

## 352. குறிஞ்சி

[வரைந்து எய்திய பின்றை மணமனைக் கட்சென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது. வரைவு மலிந்து சொல்லிய தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.]

காதல் மிகுந்த அழகிய தோழியே! ஆராயுமிடத்து நீ மிகவும் நன்மையை உடையை; வளைதல் மிகுந்த பலா மரத்தின் குடம் போன்ற பெரிய பழத்தினைப் பல சுற்றத்திற்குத் தலைவனாகிய கல்லாத ஆண் குரங்கு மிக ஒலிக்கும் அருவியை உடைய கற்பாறையிடத்தே ஆடுகின்ற மயில் ஒன்று தனக்கு முன்னே நிற்கக், கூத்தர் விழாவினைக் கொண்டாடும் முதிய ஊரில் விறலியின் பின்பு நிற்கும் முழவு இயம்புவோன்போலத் தன்னகத்தே பொருந்தத் தழுவிக்கொண்டு இனிய துணையாகிய பெண் குரங்கினை அழைக்கும் மலை நாட்டையுடைய நம் தலைவன்; உயர் குடிப் பிறப்பு உடையவன்; தன்னுடன் கூடுகின்றவர்களைப் பிரியான்; நாவால் தீய சொற்களைக் கூறுவானல்லன்: அன்பு உடையவன்; என்று நீ அவன் சிறப்புக்களைக் கூறிப் பொருத்தமுறக் கூட்டி வைத்தனை அவ்வாறே;

கடிய வேகத்தினையுடைய குதிரைகள் பூண்ட நீண்ட தேரினையுடைய அதியமானஞ்சியின் பழைய புகழை நிலை பெறச் செய்த புகழ்சான்ற பாண்மகனுனவன் நல்ல இசைகளை வரையறைசெய்த இனிமை மிக்க நூலின் எண்ணின் முறைப்படி இயற்றிய பண்ணைக் காட்டிலும் அவன் புதுமையாக இயற்றிய திறத்தைக் காட்டிலும் வதுவை செய்த நாளினும் நமக்கு இனியனுகவுள்ளான்.

*அஞ்சியத்தை மகள் நாகையார்.*

## 353. பாலை

[முன்னொரு காலத்திற் பொருள்வயிற் பிரிந்த தலைமகன் பொருண் முற்றிவந்திருந்த காலத்து மீண்டும் பொருள் கடாவின நெஞ்சிற்குச் சொல்லியது.]

நெஞ்சே வாழிய! பொருளீட்டும் முயற்சியால் நாம் இனிப் பிரிதலுங் கூடுமோ? அன்றிப் பிரிவதாயினும் இப் பொழுது யான் கூறுவதனைக் கேள்.

நாள்தோறும் கனவிலே பொருள்கள் தோன்றி மறைந்த அத்தன்மையவாகிக் கனவின்கண்ணே நாளின் கழிதலும் மூப்பின் வருகையும் அரிதாகப் பெறுஞ் சிறப் பினையுடைய காமத்தின் தன்மையும் ஆகிய இவற்றை இப்பொழுது அறிந்திலாயாயினும் செவ்விய நிலையினை யுடைய மூங்கிலின் அசையுந் தண்டினைத் தாக்கிக், கல் லென்னும் ஒலியுண்டாக ஞெமை மரத்தின் இலைகளை யுதிர்த்த வெம்பம் பொருந்திய கோடைக்காற்று நீண்ட வெள்ளிய களர் நிலத்தில்உள்ள புழுதியைமுகந்துகொண்டு சுழன்றிடக் கொடிய வெய்யில் முறுகிய வேனிற்காலத்தில் வெவ்விய காட்டில் வருந்திய நடையினையுடைய இளைய பிணையை உடன்கொண்ட விளங்கும் புள்ளிகளையும் அறல்பட்ட கொம்பினையும் உடைய அழகிய கலைமான் தெளிந்த நீரை விரும்பிய துன்பத்தால் தழையுண்டலைக் கைவிட்டு, நீரற்ற குளத்தினை நோக்கிச் சென்று, ஆங்கு உண்ணும் நீர் இன்மையின மெலிந்து தளர, மரங்கள் நிழல் அற்றனவாயுள்ள நெறியினையுடைய பாலையைக் கடந்து;

விரும்பிவரும் விருந்தினர் ஒழிதல் அறியாத பெரிய குளிர்ந்த பந்தரின்கண், வறுமையால் வருந்திய வருவோ ரைப் பாதுகாத்துக், குளிர்ச்சியாகத் தாழையின் தாதாகிய பொடியை அப்பிய கூந்தலின் மெல்லிய பின்னலில் விரும் பப் பெறும் பூவின் இதழை வைத்துப் பின்னி மகிழ்ச்சி

யினை அணி பெறக் கொண்ட புன்னகையுடன் மாண்புற்ற பள்ளியின் கண்ணிருந்து நம்முடன் நல்ல மொழிகளைக் கூறும் பொலிவுபெற்ற கூந்தலையும் அழகிய அணிகளையும் உடைய நம் தலைவியின் குணங்களை நினைந்து மயங்கு வாய் அல்லையோ?

*மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார்.*

## 354. முல்லை

[வினைமுற்றிய தலைமகற்குப் பக்கத்தார் விளம்பியது]

தலைவனே! மிகுந்த ஆற்றலையுடைய யானை போரை விரும்பி மாறுபடும் பாசறைக் கண்ணே, இடிபோன்ற ஒலிக் கும் வெற்றிமுரசம் போர்க்களத்தே ஒலிக்க அரசனும் போர் வென்று கொடியை உயர்த்தினன். பலவாகிய கறக்கும் ஆனினங்கள் கன்றோடு காடுதோறுந் தாவிவர ஆயர்கள் தம் வாயிற் குழலை வைத்து ஊதுவாராயினர்.

நின் ஏவலர் மிக விரைந்து வருவாராய் முன்செல்ல விரிந்த பிடரி மயிரினையும் கடிய நடையினையும் உடைய குதிரை நெறியின்கண்ணே ஓடுமாறு பாகன் கடிவாளத் தினை வலித்துப் பிடித்துச் செலுத்துக. புல்லார் புகழும் படை யின் குறிப்பாய விழுப்புண் கொண்ட அழகிய மாலையினைத் தரித்த மார்பில் தண்ணிய கமழும் சாந்தொடு நுண்ணிய பொடிகளை அணிய வெற்றிகொண்ட உவகையுடன் நின் மனையிற் புகுதலை நீ விரும்பினையாயால், மாண்புற்ற நீல மலரோடு மாறுபட்டமையுண்ட கண்ணினையுடைய இந்நுதல் றவளாகிய தலைவியின் அழகிய நெற்றியிற் படர்ந்த பசலை இனிமேல் எவ்விடத்துச் சென்று தங்கும்?

*மதுரைத் தமிழ்க்கூத்தன் கடுவன் மள்ளனார்.*

## 355. பாலை

[பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

தோழி! மாமரங்களும் அழகிய தளிர்களையின்றன குயிலும் அவற்றின் கொம்புகளில் இருந்து மிக இனிய குரலால் பலமுறையுங் கூவாநிற்கும். முதிர்ந்த இலைகளை உதிர்த்த மலர்கள் விரிந்த பெரிய கிளைகளில் யாழ் வல்லோன் தடவும் நரம்பு இனிய இசைகொண்ட பாலைப் பண்ணை ஒலித்தாலொத்த இசையுடன் வண்டின் கூட்டங்கள் ஒலிக்கும் தெளிந்த நீர் நிலையை அடுத்த பூந்துகள் உதிருங் குளிர்ந்த சோலையில் உள்ள தூய மணல் மேட்டில் தங்கிக் காதலராயினுர் தமது வளப்பம் பொருந்திய மனையை மறந்திருக்கும் இளவேனிற்காலம் வந்துள்ளது.

விளங்கும் வளையல் பலகாலும் நெகிழ்ந்து வீழும் துன்பினை நந்தலைவற்குக் காட்டி, யாம் தமியேம் ஆக நீ பொருளை விரும்பி அருளற்றவனுகி இத்தன்மையை மேற்கொள்ளுதல் நின் தகுதிக்கு ஒத்தது அன்று என்று கூறி அவனை வெறுத்து வருதற்கு நாம் செல்லக் கடவேம்.

*தங்காற் பொற்கொல்லனுர்.*

## 356. மருதம்

[பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளைக் குறை நயப்பக் கூறியது.]

அருவிநீர் பெருகுமிடத்து ஆம்பல் தழைத்துள்ள முன் துறையினையுடைய நன்னனது அழகிய பறம்பு போன்ற மின்னுகின்ற குளிர்ந்த கூந்தலையுடையாளே!

மேலைத் துறையில் கள்ளினைக் கொண்ட கலங்களைக் கழுவுதலின் கீழ்த்துறையின் ஒழுகும் கள்ளின் கலங்கல்

நீரை அருந்திடப் பிளந்த வாயினையுடைய யானையானது சம்பங் கோழி வாச்சியக்காரனாக, இருகப்பினாற் தெளிந்த கண்ணினையுடைய கிணைப்பறை போலப் பிறழும் சுவையுடையோன்; நீண்ட தெருவின் நடுவே மான்லக்கண்டு, எனது பொன் வளையணிந்த முன்கையைப் பிடித்தானாக; "அன்னாய்"! என்று கூவினேன். நீண்ட நாளாக வரும் விருப்பினை நீக்காமலே அவன் என் கையை விட்டு விட்டான்.

நன்னனது பறம்புமலையில் சிறிய பணை செய்வோன் அரக்கொடு சேர்த்துச் செய்த சாணைக் கல்லினைப் போலும் வன்மையமைந்த நாவினேன் ஆகி அங்கிகழ்ச்சியைத் தாய்க்குக் கூறினேன் அல்லேன் (என்னையெனின்) நல்ல தேரினையும் கடிய களிற்றியானைகளையுமுடைய சோழரது வழி வந்தோனாகிய நீண்ட நெற்கதிர்களையுடைய வல்லத்தின் தலைவன் நன்மையுள்ளவனாகவும் அவன் பகைவர் அவனைப் பற்ற முயல்வதுஞ் செய்வரன்றோ; அது கிடக்கத் தழைத்து பலவாய கூந்தலையுடையாய்! நம்பால் அருள் செய்யாது துன்புறுத்தினன் ஆயினும் அது குற்றமன்று.

(1) ணார் .

## 357. பாலை

[ பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறீஇயது.]

தோழி! நம்முடைய தலைவர் வளைந்த முள்ளினை யுடைய இண்டஞ்செடி பிரம்புடன் செறிந்துள்ள செல்லரிய அரும்புகளையுடைய குறுங்காட்டின்கண், ஆள் வேட்கையுடன் கிடந்த உண்ணாத பெண்புலியின் வருத்தத்தை நீக்கப் பெரிய கோட்டினையுடைய யானையை வலப் பக்கத்தே விழக்கொன்று, அகன்ற பாறைகள் சிவந்திடச் சிவக்கும்படி கிழித்து இழுத்துவந்து முரி பிளிர்ந்து புலாக்

நாறும் புலிகிடந்து புரண்டதால் புற்கள் சாய்ந்து கிடக்கும் சிறிய நெறிகள் மிக்க பெரிய காட்டிலே இயங்குதல் பொருந்தாது ; பெரிய களிற்றின் கூட்டமாகிய நிரை தம் கைகளால் தோண்டித் தின்றுபோதும் இனிய சுளைகளை யுடைய பலாமரத்தின் கூட்டத்தையுடைய பெரிய உம்பற் காட்டைக் கடந்து சென்றுள்ளாராயினும் ;

நினது திருந்திய அணிகளையணிந்த மூங்கில்போன்ற பெருத்த தோட்கள் வருந்தி யிளைக்குமாறு தாழ்ந்து மிக்க மழை நிலைபெற்றமையால் பெருகிய இனிய நீரினையுடைய பொய்கையின்கண், இலைகளைவிட்டு மேலெழுந்து விரிந்து தண்ணிய மணம் வீசும் நீலப்பூ காற்றினால் அசைந்தால் ஒத்த நினது அழகிய இதழ்பொருந்திய குளிர்ந்த கண்களின் அமரிய பார்வையினை அருளுண்டாக நினையாதிருத்தல் இலராவர்.

*எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார்.*

## 358. குறிஞ்சி

**[பகலே சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது.]**

தோழி! நீலமணியை ஒத்தநிறம் விளங்கும்கழுத்தினையும் அழகிய பீலியாகிய சிறந்த தோகையையும் உடைய மயில்கள் மிக்க இனிய குரலினையுடையவாய் நெருங்கி மெல்லிய தாள அறுதிகொண்டு ஆடுந் தகுதியாகிய அழகின் சிறப்பினையொப்பக் கண்ணையொத்த இதழ்களையுடைய குளிர்ந்த நறிய குவளை மலரின் குறிய மாலையினைச் செருகிய நறிய பலவாய கூந்தல் பரக்க ஆழ்ந்த நீரினையுடைய நீண்ட சுனையின்கண் நின் ஆயத்துடன் கூடி ஆடாதே வருந்திய மனத்தினை உடையையாகித் தனிமைகொண்டு இத்தன்மையையாகிய நினது மேனி வேறுபாட்டைப் பார்த்து நம் அன்னை அதன் காரணத்தைக் கேட்டனளாயின்; பொருந்

திய பெரிய மலையினின்றும் ஒழுகும் நீண்ட வெள்ளிய அருவியானது நெற்றிப் பட்டத்தினையுடைய யானையின் மீது தூக்கிய அசையும் வெண்துகிற் கொடியினை யொப் பத் தோன்றும் சிகரம் உயர்ந்த மலையை உடைய தலைவன் நம்மை அடைவித்த இந்நோயினை அந்தோ யான் யாதினால் நிகழ்ந்தது என்று கூறுவேன்?

*மதுரை மருதனிள நாகனார்,*

## 359. பாலை

[பிரிவிடை வேறுப்பட்ட தலைமகளுக்குத் தோழி சொல்லியது.]

தோழி! நீர் ஒழுகும் மையுண்கண்களும் பசலையுற்ற தோள்களும் பிறர் மிகவும் அறியும்படி வாடுதலுற நாள் தோறும் அவற்றை மறைத்து வதியும் நம் இயல்பினை அறி யாராய், நம் காதலர் வாராது மிகத் தாழ்த்தனர் என்று நீ செயலற்றது என்னையோ?

முன்பு உள்ளதாகிய அரிய சுரத்தின் கவர்த்த நெறி களில் தங்கிய கூத்தராது வாச்சிய ஒலி பெரிய மலையின் மேலிடத்தே தோன்றினாற்போல, விரும்பப்படும் பிடியினை யிழந்த நீண்ட காலையுடைய களிற்றியானை தெய்வம் விரும்பி யுறையும் மலைப்பக்கத்தே இடியொடு மாறுபட முழங்கும் இடமான பரிசிலர்க்குப் பொய்யாத நல்லபுகழினை யும் சிறந்த வண்மையையும் உடைய புல்லி என்பானது கிளைத்த கதிரினையுடைய வரகினது அழகிய பசியதட்டைக ளமைந்த பழங் கொல்லையாகிய மேட்டு நிலத்தைச் சுற்றி யுள்ள காட்டைச் சுடுவதால் எழும் விளங்கும் புகை அரு வியின் நுண்ணிய துளிகளுடன் விரவித் தோன்றும், பெரிய மலை பொருந்திய காட்டிலே சென்றோராகிய நம் தலைவர்

வான வரம்பனது வெளியம் என்னும் இடத்தையொத்த நமது சிறந்த அழகினைத் தம்மொடு கொண்டு சென்றனர்.

*மாமூலனார்.*

## 360. நெய்தல்

**[பகற் குறிவந்த தலைமகற்குத் தோழி பகற்குறி மறுத்து இரவுக் குறி நேர்ந்தது.]**

வலிய கடற்கரையை உடைய தலைவனே! பல பூக்களையுடைய குளிர்ந்த பொழிலில் பகல் முழுவதும் போக்கி ஒற்றை யுருள்பூண்ட தேரினை யுடைய ஞாயிறாகிய அழகிய செல்வன் மேற்கில் உள்ளதாகிய பெரிய மலையில் மறைய, வளைந்த கழியில் உள்ள குளிர்ந்த சேற்றிற் பொருந்திய திரண்ட காலினையுடைய நெய்தற் பூவின் நுண்ணிய பொடியை உண்டு வண்டின் கூட்டம் அதனைவிட்டேக அஞ்சத்தக்க மிகுந்த வலியுடைய இரு பெருந் தெய்வங்களாகிய சிவனுந் திருமாலும் ஆகிய இவர்களது செந்நிறமுங் கருநிறமும் ஒருங்கு பொருந்திய தோற்றத்தைப் போல அந்திவானத்தின் அழகுடன் கடலின் அழகையுங் கொண்டுவந்த மாலைக் காலத்தே நீ நீங்குவாயானால் இவள் மிகுந்த தனிமை யுடையவளாகி வருந்துவாள்;

அதனால் தாளத்தை ஒத்து நடத்தல் தப்பாத மாண்புற்ற வினைவல்ல செருக்குறுங் குதிரை ஊர்துயிலும் யாமத்தில் ஒலித்தலைப் பாதுகாத்து, நீண்ட தேரினைச் சேய்மையில் நீக்கி நிறுத்தி, மெல்லெனக் குன்றின் இழிந்து செல்லும் களிறுபோலத் திரண்ட மணல் மேட்டினைக் கடந்து, மீன் இனங்களை உண்ணும் நாரைகளுடன் பனைமரத்தின் மீது அன்றில் தங்கியிருக்கும் முற்றத்தே பொன்போல நல்ல மலராகிய நறிய பூக்கள் உதிர்ந்து பரவும் புன்னை மரங்

களுள்ள நறிய சோலையிற் செய்த நமது குறியிடத்திற்கு இரவின்கண் வருவாயாக!

*மதுரைக் கண்ணத்தனார்.*

## 361. பாலை

**[பொருள்வயிற் பிரிந்து போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]**

தூய்மலராகிய தாமரைப் பூவிடத்தே கரிய இதழ்களையுடைய குவளைமலர் இரண்டினைப் பிணைத்து வைத்தாற் போன்ற அழகிய முகத்திடத்தே சுழலும் பெரிய மதர்த்த குளிர்ந்த கண்களையும் அழகிய வளைகளையுடைய முன் கையினையும் அழகிய வாய் இதழினையும் உடைய நம் தலைவியின் கச்சணிந்த முலைப் பரப்பின் முயக்கத்தினை ஒரு நூல் இடையே தடுப்பினும் அதனை வெறுத்து உறையும் மிகப் பெரிய காதலோடு இன்பந் துய்க்கும் நுகர்ச்சியைக் காட்டிலும் மேம்பட்டதோர் இன்பம் இல்லையென்று அன்புடன் கூறிய என் மொழியினை ஏற்றுக்கொள்ளாயாகிப் பொருளை விரும்பிவந்த மயக்கத்தினையுடைய நெஞ்சமே!

பல மலைகளையும் வெவ்விய பாறைகளையுடைய நீண்ட சுரத்தையும் துன்பம்மிக யாம் கடந்துவந்துளே மாகலின், வாடாத பூவினையுடைய தேவர் உண்டற்பொருட்டு அழலோங்கிய வேள்விக் குண்டத்தின்கண் இடப்பெற்ற யாமை தான் முன்பிருந்த நிழல் பொருந்திய பெரிய பொய்கையின்கண் போதலை விரும்புவதைப்போல;

முள்போன்ற பற்களையும் சிலவாய மொழிகளையும் உடைய நம் தலைவியின் தோளினை இப்போது நீ நினைத்தலை ஒழிவாயாக;

*எயினந்தை மகனார் இளங்கீரனார்.*

## 362. குறிஞ்சி

[இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.]

தோழி! வாழ்வாயாக. பாம்புகளையுடைய மலை விடர்களினின்றுவரும் குளிர்ந்த நீர் ஒடுங்கிய துறைகளின் வழியாகத் தேனுடன் கூடி ஒழுகலின் யாறுகள் நிறை வுற்றன.

வெள்ளிய கொம்பினையுடைய யானை பாய்ந்து குத்திய புண் மிகுந்து, பசிய கண்ணினையுடைய ஆண்புலி கற் குகையினுள்ளே ஒடுங்கியிருக்கச், செம்முருக்கின் அரும் பினையொத்த கூரிய நகத்தினையுடைய வலிய பெண்புலி அதனைக் காவல் செய்திருத்தலின் எவரும் அந்நெறியிற் செல்ல மாட்டார்கள்.

அந்நிலையில் இருள்வந்து விட்டதென்று எண்ணுதலை ஞகி வெற்றியைத் தரும் வேலினைக் கையிற்கொண்டு நம்பா லுள்ள காதல்கொண்டு வருதலால் வந்த நன்மையாளஞகிய நந்தலைவன் தன் எண்ணம் பயனிலதாக நம்மைச் சேராது மீளின் இன்று இப்பொழுதும் யான் உயிர்தரித்திரேன்.

நமது முலையிடமாகிய சுணங்கு அணிந்த பரப்பில் கிடக்கும் முத்துமாலைபோலவும், மலையினிடத்து நீண்ட சோலையில் துளிகள் சிதறும் குளிர்ச்சியினையுடைய விளங் கும் வெள்ளிய அருவிபோலவும் திங்களின் அழகிய கதிர் கள் மலையினிடத்தே பரவின; நாம் செய்வது என்னையோ?

*வெள்ளி வீதியார்.*

## 363. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகளுக்குத் தோழி சொல்லியது.]

தோழி! திரண்ட அரையினையும் சிறிய இலையினையும் உடைய நெல்லியின் வடுவற்ற பசிய காய்கள் கற்களை

யுடைய நெறிகளிடத்தே கடிய காற்று உதிர்த்தலின் பொன்னுற்செய்த காசுபோல் அழகுபெறப் பரவிக்கிடக்கும் காட்டினையடைந்து அங்கு வழிவருவாரைப் பார்த்துக் கொண்டிருந்த கொலையை விரும்புங் கோட்பாட்டினையும் கொடிய தொழிலையும் உடைய மறவர் வழிச்செல்லும் மக்களது அரிய மார்பிலே எறிந்த வேலால் உண்டாகிய சிறந்த புண்ணை மிகக்கொண்டு பட்டோரை யடைந்த வளைந்த வாயினையும் கூரிய நகத்தினையும் உடைய பருந்தின் சேவல், அவ்விடத்துப் பொருந்திய ஊன் உண்ணற்குத் தன் கிளையினைத் தருகிற்கும் தெளிந்த குரலால் அழைக்கும் துன்பத்தைத் தரும் கொடிய சுரத்தைக் கடந்து சென்ற நம் தலைவர் ;

தாம் கருதிச்சென்ற பொருளீட்டுந் தொழிலில் வெற்றியுடையவர் ஆகிக் கரிய அழகிய இணையொத்த எதிர் எதிர் பொருந்திய மலர்களைப்போன்ற மையுண்ட கண்களின் பெண்மானையொத்த நின்பார்வை மிகுந்த அழகினையுற நம்மை விரும்பி இங்கேவந்து சேர்ந்தனர் ஆகலின், வரிசையாகச் செல்லும் குதிரைகளை விரைவாகச் செலுத்தி, அகன்ற பெரிய வானில் பகற்பொழுது கழியச்சென்று மழுங்கிய ஒளியினையுடைய ஞாயிறு பெரிய மலையில் மறைந்திட, அழகிய அன்புடையாளே, பகற்பொழுது கழியவே குவியும் மலர்போல வாடிப் பள்ளியை அடைந்து இத்தன்மையுடையை ஆகாதேகொள்.

*மதுரைப் பொன்செய் கொல்லன்*

*வெண்ணாகனார்.*

## 364. முல்லை

**[பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]**

தோழி! திசையெல்லாம் மறையப் பரவிக் கால் இறங்கி, இடியேற்றினையுடைய பெரிய மழைசொரிந்ததாக

பள்ளங்கள்தோறும் ஆடுங்களத்தே மயாலிக்கும் பறை போல வரிகளையுடைய தேரை ஒலிக்கச், சிறந்த பொன்னு லாகிய விளங்கும் அணிகளைத் தொங்கவிட்டாற் போன்ற நீண்ட பூங்கொத்துக்களையுடைய கொன்றை அழகுபெற, காடு முழுவதும் தோன்றிச் செடி விளக்குப்போன்ற பூக் களைத் தன்னிடத்தேகொள்ள, முல்லைப் பூக்களும் தேற்று வின் பூக்களும் மலரவும் மலையிடத்தனவாகிய அகன்ற வாயினையுடைய அழகிய சுனைகள் விலங்குகள் நீர் உண்ணு மாறு நீர் நிறைய, இக்கார்காலம் கார்ப்பருவத்தைத் தொடங்கியது,

நம் காதலரோ கொடிய சினத்தினையுடைய அரசனது மிகப் பெரிய பாசறைக்கண்ணே, பகைவரை வெற்றி கொள்ளும் விருப்பத்தால் நம்மை நினைத்தலும் செய்திலர். நாம் வருந்த நம்மைக் கொல்லுதல் கருதி வருவதுபோன்ற மாலை விரைந்து நம்பால் வருங்கால் அதனைக் கடந்து செல் லல் அரிதாகுமன்றோ ? இதற்கு யாம் யாது செய்வாம் ?

*மதுரை மருதங்கிழார் மகனார்*

*பெருங்கண்ணனார்.*

## *365.* பாலை

**[தலைமகன் இடைச்சுரத்து நின்று சொல்லியது.]**

நெஞ்சே! வாழி. அகற்சிவாய்ந்த வானத்தின்கண் மிகுந்த இருள்பரக்க ஞாயிற்றைப் போக்கிய பசிய தோற் றத்துடன் சினத்தல் மிக்க துன்பத்தைச் செய்யும் மாலைக் காலத்தே ;

காட்டு நெறியில் உள்ள நடுகல்லை ஆள் என நினைத்து உதைத்த காட்டு யானையின் சிதைவுற்ற வளவிய நகம் பெரிய பனைநுங்கின் தோடுபோல் ஒடிந்திடும் அவ்விடத்தே வன்கண்மையுடைய ஆறலைப்போர் அம்பு எய்யும் முயற்சி

யோடு பதுங்கி யிருத்தற்கண் வழிவருவார் இல்லாமையால் தம் வறுமை களைவோரைக் காண லாகாத இடமாகிய வெப்பம் மிகுந்த கொடிய சுரநெறியில் என்னை அழைத்து வந்த நீ;

எனக்குத் துயரினைச் செய்து நீயும் ஆற்ருயாகி மீண்டு வெற்றி வேலினையும் சிறந்த வண்மையினையும் உடைய கழுவுள் என்பானது காமூராகிய அவ்விடத்துப் பூதத்தால் தரப்பட்ட பொரிந்த அடிமரத்தினையுடைய வேங்கையின் தண்ணிதாகி மணக்கும் புதுமலர்போல நாறும் அழகிய சிலவாகிய கூந்தலையுடைய நம் தலைவியின் அழகிய மடப்ப மாகிய குணத்தினை நினைப்பாய் ஆயினை.

*மதுரை மருதனிள நாகனுர்.*

## 366. மருதம்

[ பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் வாயில் வேண்டிய விடத்துத் தோழி சொல்லியது ]

தலைவனே! தாழ்ந்த கிளைகளையுடைய மருதமரம் சிறக்க அழகு பெற்றிருக்கும்; நீர் சூழ்ந்த அகன்ற களம் பொலிவுறப் போரினைப் பிரித்துக் கடாவிட்டுப் பின் கள் ளுண்டுவந்த உழவர், அக்கடாக்களைக் கட்டவிழ்த்து விடுத் துக் கடிய காற்றில் நெல்லினைத் தூற்றப் பறந்துபோன துரும்புகள் முழுவதும், உப்பளத்தில் உள்ள சிறிய பாத்தி களில் இடமில்லாது எங்கும் வீழ்ந்து பரத்தலின்;

பெரிய கடற் பரப்பிற் குளிர்ந்த துறைக்கண்ணுள்ள நுளையர்கள், இனிமை மிக்க வெள்ளுப்புக் கெட்டமையின் சினந்து, வயல் உழவரொடு எதிர்த்து மாறுபட்டுக், கை கலந்து மிக்க சேற்றுக்குழம்பினை யெறிந்து செய்யும் போரி னைக் கண்டு நரைத்த முதியோராகிய மருதநில மக்கள் போர் செய்யும் கைப்பிணிப்பினை விடுத்து விலக்கி, முற்றியதேறு

கிய கள்ளின் தெளிவைப் பரதவர்க்கு அளிக்கும் இட மாகிய ;

பொற்பூண் அணிந்த எவ்வி என்பானது நீழல் என் னும் ஊர் போன்ற அழகுபெற்ற மூங்கில்போலுந் தோளும் நல்ல நெற்றியும் உடைய பரத்தையொடு மண நாறுங் குளிர்ந்த சோலையிலே தங்கி நேற்று, நீ தனக்குத் தீங்கு செய்தமையை உணர்ந்து எம் தெய்வம் போன்றவளாகிய தலைவி அழுத கண்ணினை உடையவளானாள்.

*குடவாயிற் கீரத்தனார்,*

## 367. பாலை

[இடை வேறுபட்ட தலைமகள் வற்புறுக்குந் தோழிக்குச் சொல்லியது.]

தோழி ! நல்ல மார்பகத்தேயுள்ள அழகிய முலையினைப் பொருந்தப் புல்லுந்தோறும் உயிர் குழைவது போலும் மென்மை வாய்ந்த குற்றமற்ற இனிய துணைவரைக் கூடி யிருப்பவர்களுக்கு, விளங்கும் ஒளிவாய்ந்த ஞாயிறு வானி டத்தினின்றும் நீங்கித் தனது பலவாகிய கதிர்களும் வெம்மை குறையப்பெற்ற மேற்குமலையினை அடையும் போழ்தில் கலக்கமுற்ற முதிய ஏறு, தனது ஆண்குரல் தோன்ற அழைத்திட மனையைச் சூழ்ந்து வளரும் நொச்சி யின்கண் மான்கள் சேர்ந்து தங்கியிருக்கக், காட்டரண் களின் பக்கத்தேயிருந்த அழகிய குடியிருப்புக்களையுடைய சிற்றூரின்கண்ணே கரிய அடியினையுடைய வேங்கைமரஞ் சூழ்ந்த மேட்டுநிலத்தே விளைந்த வரகாகிய மிக்க தானியம் நிறைந்த தொகுதியாகவுள்ள கூட்டின் ஒருபக்கத்தே குவிந்த அடியினையும் பசிய கண்ணினையும் உடைய ஆண் காட்டுப் பூனை, ஊனை விரும்பியுள்ள பெண் பூனையின் வருத்தும் பசியினை நீக்குமாறு, தளிரையொத்த கன்

னத்தினையும் நெருங்கிய மயிரினையுடைய கழுத்தினையும் நிமிர்த்த தலையின்கண் முருக்கம்பூவினையொத்த சூட்டினையும் உடைய சேவற்கோழியினைப் பற்றுஞ் சமயத்தைப் பார்த்திருக்கும் பொலிவற்ற இம்மாலைப்போதும் உறுதியாக இனிதாகும்.

*பரணர்.*

## 368. குறிஞ்சி

**[பகலே சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது]**

தோழி! வாழி! காலிலே செருப்பினையணிந்த வேடன் சுட்டெரித்த அகன்ற கொல்லையில், கரிந்த இடங்களைக் கழுவிச் சென்ற மிகுந்த பெயலாகிய மழையீரத்தில் இதழ்கள் வளர்ந்த பசிய தினையின் நீண்ட கதிர்களைக் காத்திருக்கும் ஒளிபொருந்திய வளையலையணிந்த மகளிர் தமக்கு ஊசலாகக் கொண்டு ஆடும் கிளைகளைப் போக்கிய கொம்பிலே பூங்கொத்துகள் நெருங்கிய குன்றின் பக்கத்தில் உள்ளதாகிய நீண்ட அடியினையுடைய வேங்கைமரம், இளைய மயிலின் உச்சியில் உள்ள குடுமிபோலத் தோன்றும் மலைநாட்டையுடைய நம் தலைவன்;

உயர்ந்த மலைப் பக்கத்தேயுள்ள காந்தளைப் பெற்ற அழகிய சோலையாகிய குரங்குகளும் ஏறியறியாத நீண்ட மரங்கள் செறிந்த காட்டில் விளக்கம் பொருந்திய சுனையில் உள்ள தெளிந்த பளிங்கினையொத்த இனிய நீரில், பிடியுடன் கூடிய களிறுபோல நம்முடன் பலநாளும் ஆடி நம்மைப் பிரிந்து வேறிடஞ் சென்று சிலநாள் கழிதற்கு முன்பே அங்கிகழ்ச்சி முறைமுறையாகப் பெருகி, அழகிய மூங்கிற் குழாயில் முற்றிய தேறுகிய கள்ளின் தெளிவை வண்டு மொய்க்குங் கண்ணியை உடையாரால்

உண்டு மகிழும் சிற்றூரின்கண்ணே. பலர்வாயிலும் பேசப்பட்டுக், கொங்கு நாட்டினர் மணியினை இடையிற் கட்டிக் கொண்டு தெருவில் ஆடும் உள்ளிவிழவின் ஆரவாரம் போன்ற அலராகா நின்றது; இஃதென்னையோ ?

*மதுரை மருதனிளநாகனார்.*

## 369. பாலை

[ மகட் போக்கிய செவிலி சொல்லியது.]

மகளே! அவனுடன் பொருந்தி இயைந்திருந்தேனுடைய நிலையினைக் காண்பாயாக.

ஒளிபொருந்திய வளையலைச் செறித்த முன்கையில் முறையானேகொண்டு சூழநின்ற மங்கையர் பலவாறுகப் பாராட்ட, சிவந்த ரேகையினையுடைய கிளிகளும் இனிய பாலை உண்கின்றில; மயில்போலுஞ் சாயலையுடைய சிவந்த அணிகளையணிந்த தோழியர் கூட்டங்களும் விளையாடுகின்றில; பூஞ்செடியுடைய தாழிகளும் பல மலர்களைக் கொண்டில; அழகிய நிறம் பொருந்த முத்துவடம் முதலிய புனைந்து செய்த அழகு அமைந்த வலிய சுவரின் கண்ணுள்ள பாவைகளும் பலியாக எதனையுங் கொண்டில; இவைகளைக் கண்டு நோய் வருத்த வருந்துவதன்மேலும் சூழ்ச்சியில்லேனாகிய யான், கொடியவளாகிய அவள் எண்ணியதை உணரேனாகித், தொடியணிந்த மகளே! இன்று நினது தழைத்த கூந்தலைப் புனைக என்றதற்கு என்னை வெறுத்து மனம் உடைந்தவளாகி;

அவள் தன் செல்வ நிலைக்கேற்ற பரிசு கடல்போன்ற படையினையும் கை வன்மையையும் உடைய சோழரது நீங்குதல் இல்லாத நல்ல புகழினையுடைய உறையூர்போன்ற செல்வமுடைய நல்ல மனையில் புதிதாக ஒப்பனை செய்து தன் சுற்றத்தாரானவார் மணஞ் செய்விக்கவும் மனம் பொருந்

தாதவளாகிக், கவர்த்த அடியினையுடைய ஓமைமரங்கள் உயர்ந்துள்ள காடாகிய நீண்ட இடத்தில் மணிகள் பதித்த பரிசையினையும் சிறந்த காம்பினையுடைய நீண்ட வேலினை யும் துணிவு தங்கிய நெஞ்சமுடன், மிகுந்த மெய்வலியினை யும் உடைய அறியப்படாத நாட்டின்கண் அரிய சுரநெறி யிற் கொண்டுபோய இளையோனுக்குப் பொருந்திய பெரிய மடப்பமும் தகுதியும் உடைய என் மகள் ;

நன்கு மதிப்பும் உயர்வும் இல்லாது சிறிய ஊரில் வறுமையுற்ற பெண்டினது புல்வேய்ந்த குடிலாகிய ஒரு பசு கட்டியுள்ள ஒற்றைத் தூண்கொண்ட முகப்பினை யுடைய இயைபில்லாத வறிய மனையில் சிலம்பு கழித்து அவனோடு மணம் பொருந்தினளோ என்று யான் வருந்து வேன்.

*நக்கீரர்.*

## *370.* நெய்தல்

**[பகலே சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.]**

தோழி! வளைவுகொண்ட மாலையை உடைய இள மகளிர் வண்டல் விளையாட்டினைச் செய்து மீண்டு செல்லா நிற்பர்; பகலும் ஒளி குறைந்தது. பகற்பொழுதில் அகன்ற இலைகளையுடைய புன்னையின் புள்ளியில்லாத நிழலில் எங்க ளுடன் விளையாடி இராப்பொழுதில், காய்ந்த புல்லால் வேயப்பெற்ற வளங்குன்றாத நல்ல நமது இல்லின்கண் வருத்தத்துடன் பொருந்தி யிருப்பாளாயின் உனது தந்தை யின் அரிய காவற்படுவேன் என்கின்றனை; அன்றி நீ இல் லிற்குச் செல்லுக என்று நான் கூறுதலையும் பொருளாகிச் செல்லின் உயிர்வாழமாட்டேன் என்று கூறுகின்றனை அவ் வாறாயின்.

புலிநகக் கொன்றையது வண்டு மொய்க்க மலர்ந்த மலர்க்கண்ணியுடன், நெய்தலின் தண்ணிய அரிய பசிய மலர்மாலை யசைய அந்திக் காலத்தே கடற்றெய்வம் கரையின்கண் நிற்பதுபோல நீ இக்கடற்கரைச் சோலையில் தனித்து நிற்க யான், வெறியாட்டம் மேவிய மகள்போன்று பொலிவுபெற்ற எனது அழகினைத் துறந்து அவள்பின் வறிதே பெயர்தல்போல நீங்குதல் இயலாதவளாகின்றேன். இவ்வூர் அலர் கூறினுங் கூறுக.

*அம்மூவனார்.*

# 371. பாலை

[பொருள்வயிற் பிரிந்து போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

நெஞ்சே! தெளிந்த நீரினையுடைய அழகிய சுனையில் உள்ள ஒளி பொருந்திய மலரைப் போலும் எனத் தேனை விரும்பிப் பூக்களை ஆராயும் வண்டுகள் விரும்பும் மலர் நிறைந்த கூந்தலையுடைய நம் காதலியின் கண்கள்;

அழகிய விளிம்பினை உருவி நாண் ஏற்றிய விசையமைந்த வலிய வில்லினையும் குருதியாற் சிவந்த வாய் பொருந்திய அம்பினையும் உடைய சினங்கொண்ட பார்வையமைந்த வேடர் அம்பினை எய்திடலான் இறந்த தனது காதல் மிகுந்த பிணையினை நினைத்துக், குறுமையும் நெடுமையும் ஆகிய அளவினையுடைய தன் குட்டிகள் தன் பக்கத்தில் விளையாடத், துன்பினை யடைந்த முறுக்குண்ட கோட்டினையுடைய ஆண்மான், மேயும் உணவினை வெறுத்த துன்பத்தோடு வருத்தம் மிகுந்து. களர் நிலத்தில் உள்ள சிறிய குழியில் சிறிது நீருங்குடியாது அம்பு தைக்கப் பெற்ற மக்களைப்போல வருந்திக் கண்ணயர்ந்து கிடக்கும் பசுமையறக் கொதித்த பாழ்பட்ட சுரநெறியினைத், தமியே

மாய்க் கடந்து செல்லும் நம்மைக் காட்டினும் நீர் ஒழுகப் பெற்று எத்தன்மையான துன்பத்தினை எய்தாநிற்குமோ ?

*எயினந்தை மகன் இளங்கீரனார்.*

## 372. குறிஞ்சி

[அல்லகுறிப்பட்டுப் போகா நின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

என் நெஞ்சே வாழி! பிறரால் தெறுதற்கு அரிய முறையினையுடைய கடவுள் காத்தலின், பெரிய தேன் கூடுகள் தொங்குவதும் நாட்டின் எல்லையினைக் காண்டற்குரிய உயர்ச்சியினையும் அகன்ற இடத்தினையும் உடையதுமாகிய அச்சம் பொருந்திய பக்க மலையினை யுடைய பாழிமலையிடத்தே பழைய வேள்குடிமக்கள் தமது அகன்ற ஊரின்கண் மறைத்து வைத்த அரிய அணிகலமாகிய செல்வத்தைப் போலப் பெறுதற்கு அருமை யுடையோளது இன்பத்தை எண்ணி நாம் வீணாக வருந்தியுள்ளேம் என்று யான் கூறவும், அதனை நீ கைவிடுவதற்குப் பொருந்தாயாய் ;

பெரிய கிளையிற் கட்டப் பெற்ற பலரும் ஆடும் ஊசலினது ஏறியும் இறங்கியும் ஆடுங் கயிற்றினைப் போன்று செல்கையாலும் வருகையாலும் வருந்தி, நீண்ட வழியினை யுடைய குதிரை மலைக்குத் தலைவனாகிய கூரிய வேலை யுடைய அஞ்சி என்பானது கடியபகைப் புலத்தினை வருத்திய வளைந்த வில்லையுடைய வீரர், தம் பகைவர் நிரைகளைக் கவரும் போரில் ஒலிமிக அடிக்கும் பெரிய உடுக்கையின் வாரைப் போலச் செறிந்தும் நெகிழ்ந்தும் மேய்தற்பொருட்டு உமிழ்ந்து வைத்த மணியினை யிழந்த பாம்பைப் போல நீ மிகவும் வாடுதலுற்றனை; நம்மை வருத்திய காதலி, பகை வேந்தரது மாறுபாடு தணிதற்கு ஏதுவாகிய

மதில்போலக் காவல் மிகுந்து எய்துதற்கு அருமையை உடையவள் அல்லளோ?

*பரணர்.*

## 373. பாலை

[பிரிந்து போகா நின்ற தலைமகன் இடைச் சுரத்தில் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

நெஞ்சே! போர்முனை அகப்படுத்திக் கொண்டதாக கலக்கமுற்றுப் பீர்க்குப் படர்ந்து மனைகள் பாழ்பட்டுப் போன மரைமா வந்தடையும் மன்றத்தின் கண்ணுள்ள பருத்த காலினையுடைய யானையின் பரிய முதுகு உரிஞ்சுதலால் சோர்ந்த விட்டம் வீழ்ந்த முதிய தூண்களையுடைய அம்பலத்தே, அரியசுரத்தைக் கடந்து வந்த வருத்தத்தால் செயலற்றுப் பெரிய புற்கென்ற மாலைக் காலத்தே தனிமை வந்தடையத் திண்மையை உடைய நம் உள்ளம் மீண்டு செல்லுதலை வற்புறுத்த, முழந்தாள்களைக் கையாற் பூட்டிய தனித்த நிலையினதாகிய இருப்புடன் தனது நிலையினையே எண்ணியிருக்கும் நமது இயல்பினை அறியாளாகி;

நீண்ட பலவாய கூந்தலையும் சிவந்த அணியினையும் உடைய் நம் தலைவி செறிந்த இருளையுடைய நடு இரவில் அணையின் கண் கிடந்து கொதிப்புற்று வெறுக்கும் உள்ளத்துடன் மெத்தென உயிர்த்து அழகிய பூவிதழ் போன்ற குளிர்ந்த கண்கள் நீர் பெருக வருத்தம் மிகுந்து பெரிய தோளினை நனையச் செய்யுமாறு அழுதலின் ஒழுகும் நீர்த்துளிகளை மெல்லிய விரல் நகத்தால் தெறித்து, வெற்றி வேலினையும் தலைமை கொண்ட யானையினையும் அடும் போரினையும் உடைய அரசர் பலர் ஒருங்குகூடிச் சூழ்ந்து கொண்டதால், முறிதல் பொருந்திய கூட்டினையுடைய ஒரு மதிலின் கண் அகப்பட்ட அரசனைப் போலத் துயில் ஒழிந்துள்ளாளோ இரங்கத் தக்காள்.

*பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார்.*

## 374. முல்லை

[பாசறை முற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.]

நல்ல திறன் வாய்ந்த பாகனே! திசைகளிற் சென்று இருண்டு அகன்ற இடத்தினையுடைய உலகம் மறைய வலமாக எழுந்து சென்று, பொறையால் வருந்துதலைக் கொண்ட வளவிய பல முகில்கள் வானைப் பிளந்தன போலப் பலவும் ஒருங்கே தோன்ற மின்னுதலைச் செய்து இறங்குவனபோல நெருங்க நெருங்க வந்து, கவிழ்ந்தன போல மிகுதியாகப் பொழிந்து, இடித்தலுங் குமுறுதலும் இல்லாமல் பாணரது வடித்தலுற்ற நல்ல யாழ்நரம்பு ஒலிப்பதுபோன்ற இனிய குரலுடன் மிக்க துளியைப் பொருந்தி நன்றாகிய பல மழைகளைப் பெய்து கழிந்த பூக்கள் நாறும் விடியற் காலத்தே;

செறிந்த மணல்மேடு பட்டதும் களர் மண் தோன்றுவதுமாகிய நெறியில் சிறிய வயிற்றினையுடைய தம்பலப் பூச்சி குறுகக் குறுகச் சென்று நீலமணியுடன் கூடிய பவழம் போலக், காயாவின் அழகு மிக்க வாடற் பூவில் ஒளிந்து மறையக் கார்ப் பருவமானது அழகு பெற்ற விருப்பம் பொருந்திய காலத்தே; பெரிய தோளினையும் நுண்ணிய இடையினையும் திருந்திய அணிகளையும் உடைய நம் தலைவி, நம்மை விருந்தாக ஏற்றுக்கொள்ள நம் தேர் விரைந்து செல்வதாக.

*இடைக்காடனார்.*

## 375. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

தோழியே! நம் தலைவர் பொருளீட்டுதற்குச் சென்று நீட்டிப்பார் அல்லர். அவர் திறத்தில் வருந்துதலை விடுவாயாக! என்று சொல்லுகின்றாய்.

தாம்அம்பு விடுத்தலின் சிறப்பினைக் காணும்பொருட்டு புதியராய் வருவோர் அணிகலன் இல்லாதவராயினும் அவர்களைக் கொன்று பறவைகட்கு இரையாக்கும் வழிபறித்தலையன்றிப் பிறதொழிலை அறியாத இளையர் செருக்கித் திரியும் கவர்த்தநெறியில் கூட்டமாகிய நரிகளின் இனத்தோடுகூடி பிணத்தினை உண்ணும் குருதி படிந்த வளமுடைய நெருங்கிய விரல்களமைந்த காட்டிலுள்ள ஆண் பருந்து தங்கியிருக்கும் அடி திரண்ட யாமரத்தின் வெள்ளிய திரண்ட கொம்பானது போரின்வெற்றி நீங்காத திண்ணிய தோளினையுடைய சோழர் பெருமானாகிய என்றும் விளங்கும் புகழினையுடைய இளம் பெருஞ்சென்னி என்பவன் தனது குடிக்குச் செய்யுங் கடனாதலின் முடிக்கப்படும் பொருளாகிய போர் வினையை முடித்தற்குச் செம்பினையொத்த மதிலையுடைய பாழி என்னும் அரணை யழித்துப் புதிய வடுகரது பசிய தலையைத் தறித்துக் கொன்ற யானைகளின் கோடு போலத் தோன்றும் அச்சம் வரும் இயல்பினையுடைய கொடியசுர நெறியைக் கடந்து சென்ற நம் தலைவர் தீங்கற்றவராக மீண்டு வருதலை அறிவேனாயின் தோழியே என்னுடைய கண்கள் அழமாட்டா. ஆனால் யான் அதனை அறிந்திலேனே!

*இடையன் சேந்தங் கொற்றனார்.*

## 376. மருதம்

[காதற் பரத்தை புலந்து சொல்லியது.]

தலைவனே! செல்லாதே. பாகனால் பழக்கப் பெறாத யானை காவலையுடைய நீரில் விளையாடலைக் கற்றதாக அதனால் மிக்கெழும் நீர் மோதிய மருத மரங்கள் உயர்ந்த தோட்டத்தினையும் தழைத்த கதிர்களமைந்த வயல்களையும் உடைய கழாஅர் என்னும் பதியின் முன்பு ஆரவாரம்

பொருந்திய சுற்றத்தினருடன் கரிகால் வளவன் கண் ணுற்று மகிழ ;

நீர்விழாக் கொண்டு இனிய இசை தங்கிய ஒள்ளிய பொறிகளையுடைய அழகிய வீரக் கழல் சிவந்த அடியில் புரளக் கரிய கச்சினைக் கட்டிய காட்சி இனிதாகிய அழகிய வயிற்றிற் கட்டப் பெற்ற மணியுடன் பெரிய பொன்னு லாகிய கஞ்ச தாளம் ஒலிக்கப், புனலின்கண் விரும்பி யாடிய அத்தி யென்பானது அழகினை விரும்பிக் காவிரி அவனை வெளவிக் கொண்டு கடலில் ஒளித்தாற் போலச் சேரிப் பரத்தை நின்னைக் கவர்ந்து சென்ருளாக. நும்பால் யாம் வெறுத்தல் இல்லேம். அவ்வாருகவும் எம்மிடத்து நுதல் பசலையுற்றது காண்பாயாக.

சேற்றில் உள்ள அழகிய துளையுடைய வள்ளையாய ஒள்ளிய கொடியைப் பின்னுவித்து வளம் பொருந்திய இத ழினையுடைய நெல்லினது வளைந்த கதிர் விரிந்திடத், துய் யினைத் தலையில் உடைய வளைந்த இருமீன் பாயும் இட மாகிய அழகு பொருந்திய வளைந்த பிடரி மயிரினையுடைய குதிரையை உடைய குட்டுவனது மரந்தைபோன்ற அழகி னைத் தந்து செல்க. நின்பாற் செய்யுங் கடமைகளை மிகவும் உடையேன்.

*பரணர்.*

## 377. பாலை

**[பொருள் கடைக் கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லி யது.]**

நெஞ்சே! பொருள் வேட்கையானது கொண்டு வருத லால் வந்துற்ற இரவலர் இரந்த பொருள்களைப் புகழ் உண் டாக அளித்தலைச் செய்ய வேண்டுவோர், கோடையின் வெம்மை மிகுந்தமையால் வறண்ட நிலத்தே உதிர்ந்த

சிறிய புல்லரிசியைச் சிறிய பலவாகிய எறும்புகள் ஒழுங்கு பெறச் சென்று கொண்டு வந்து தம் வளையில் தொகுத்து வைத்தனவாகிய தாம் விதைத்து விளைக்காத அவ்வுண வினைக் கொள்ளும் பெருத்த வில்லையுடைய மறவர்கள் பல முறை புகுந்து பாற் பசுக் கூட்டங்களைக் கவர்ந்தமையின் வளமுற்றிருந்த ஊரின் குடிகள் போய்விட்ட இடமாகிய பெரிய பாழ்பட்ட மன்றத்தின் கண்ணே :

நரையினை யுடைய முதியோர் நடுங்குந் தமது தலையைக் கவிழ்த்துத் தமது கவர்த்தமனத்திலே இருத்தி வல்லுப் போர் புரியும் வல்லுத் தரையின் அழகு கெட வரிகள் பொருந்திய நிறமுடைய கறையான் அரித்தமையால், பொலிவற்றுப் பெரிய அழகு கெட்ட அச்சம்மிக்க பொதியிலின் இன்னுமையுடைய ஒரு புறத்தே தங்கி யிருந்து இனிய நகையையும் சிறிய மென்மை யாகிய சாயலையும் உடையாளது பேரழகை நினைத்து ஏதிலர் ஆகியும் முடிவாக மேலுஞ் செல்லா நிற்பர். (நீ அவ்வாறு செல்லுதற்கு வல்லையோ ?

*மாறோக்கத்துக் காமக்கணி நப்பாலத்தனார்.*

## 378. குறிஞ்சி

**[இரவுக் குறிச் சிறைப்புறமாகத் தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியது.]**

தோழி ! மிகுந்த பொருள் தங்கும் உயர்ந்தோங்கும் மனையிடத்தே திருமணஞ் செய்த மகளிர் தம் கூந்தல் போல மணம்பொருந்துமாறு, காற்று அசைத்தலால் அழகிய தளிர்களையுடைய வேங்கை மரத்தின் பொன் போன்ற நறிய தாது உதிர்தலால் விருப்பந் தரும் பீலி பொருந்திய சிறந்த தோகையைஉடைய மயில் வேறுவேறு வகையின பெரிய மலையில் வாழும் வருடைகளின் கொம்புகள்

பொருந்திய இளைய கடாக்கள் ஒலியைக் கேட்டு அஞ்சி இரிய ஆடுங் களத்தே யொலிக்கும் கொம்பு போல இனி யனவாக ஒலித்து வானிற் பறந்து சென்று நீண்ட கணுக் களையுடைய அசையும் மூங்கிலின் கண் பசிய புறத்தினை யுடைய மெல்லிய அழகிய இடம் வளைய விளங்கத் தங்கி யிருக்கும் பெரிய மலை பொருந்திய நாட்டை யுடையவனு கிய தலைவன் பிரிந்தமையால் ஆகிய தனிமையும்; மாறு பட்ட அன்னையின் பொருந்தாத பார்வையும் வாடையால் அசைக்கப்பெறும் பெய்யும் பனிக் காலத்தே ஒளிபொருந் திய தனது மண்டலம் மழுங்கியிட ஞாயிறு மேலைக் கட லில் மறையும் துன்பம் மிகுந்த மாலைப் பொழுதும் ஆய யாவும் கூடி நின்று வருத்தவும், நீ எவ்வாறு உயிர் வாழ் கின்றாய்? என்று கேட்கின்றனை;

நீங்காமைக்குரிய சூளுறவு செய்து பிறகு நம்மைத் துறந்தோராகிய அவர் நம்மை நினையாராயினும் அவர் நாட் டில்நெருங்கிய இலைகளையுடையபலாவின் பழத்தினைக் கவர்ந் தெடுத்த கைகளையுடைய அறியாத பெண் குரங்கு ஆண் குரங்கினோடு துள்ளித் திரியும் மிக்கவலியமைந்த தெய் வத்தையுடைய நீண்ட பெரிய மலையிடத்து ஓசையினிதா கிய அருவியைக் கொண்டு வானையளாவிய உச்சி மலை காணப்பெறுதலின் உள்ளேன் ஆகா நின்றேன்.

*காவட்டனார்.*

## *379.* பாலை

**[முன்னொரு காலத்துப் பொருண் முற்றி வந்த தலைமகன் பின் னும் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.]**

நம்மை விரும்பியிருப்பவளாகிய நம்தலைவியின்பழைய அழகு கெட, அறிவுதெளியப் பெருமையின் திமையுடன் பொருந்தி இரக்கம் நீங்க மிக்க வன்மையுடன் பொருளை

விரும்பி அதுபற்றி முயலுதற்கு முற்பட்ட வலிய நெஞ்சமே! என்னுவாயாயின் யான் கூறுபவைகளைக் கேட்பாயாக!

விரிந்த அலைகளையுடைய கடல் சூழ்ந்த மண் திணிந்த இவ்வுலகம் முழுவதும் பிறர்க்குப் பொது இல்லையாகத் திகிரியுருட்டுஞ் செல்வமானது உண்மையாக வேலைக் கூடியதாயினும் அதன்போக்கு இரவில் கனவில் தோன்றி மறையும் அத்தன்மையது ;

அதனாற் கலப்புற்ற பல மலர்களை வண்டு மொய்க்கும் படி சூடிப் பிடரின்மீது தங்கிய நிலையினின்றும் அசைந்த பெரிய கூந்தலின் செறிந்த பலவாய நாற்றம் வேண்டுமிடத்துப் பெற்று மகிழ; செய்யப்பெற்ற விளங்கும் அணிகளாற் பொலிவுற்ற தோளையணைந்து பொருந்திய மிக்க துயிலை ஏற்குந்தோறும் மாறுபட்டு மெய்யினுள் மெய்புகுதலொத்தகைகளால் விரும்பிக் கொள்ளும் சேர்க்கையினும் மேம்பட்ட பொருளை யான் கண்டதில்லேன்.

நீ நின்னுடைய பலவாகிய பொருள் விருப்பால் என் சொல்லின் அளவைக்கடந்து செல்லுதலை வற்புறுத்துவை யானல், காற்றினால் மிகுந்தெழுந் தீ மேவியதாகிய இலையற்ற காட்டில் மானின் புறத்துள்ள புள்ளி போன்ற புள்ளிகளையுடைய மர நிழலில் தங்கி யிருக்குங்கால் இவளது மறத்தற் கரிய பல குணங்களும் நின் நெஞ்சத்திலே வந்து புக, விரும்பி ஒரு கூற்றினை நினைத்தல் மாட்டாயாகி வேறுபட்டு நின்று திட்பம் அறமெலிந்து, பெரிய புலியோடு போர் செய்து வருந்திய வடுப் பொருந்திய கொம்பினையுடைய களிற்றின் பொருட்டுப், பெண் யானை ஆரவாரத்துடன் இட்டேகும் அடிகள் பதிதலால் பள்ளமாகிய சென்று தொலையாத நீண்ட சுரத்திளிடையே தங்கி வருந்துவாய் அல்லையோ?

*பாலை பாடிய பெருங்கடுங்கோ.*

## 380. நெய்தல்

[பின்னின்ற தலைமகனுக்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறியது ]

தோழி ! நான் கூறுவதனைக் கேட்பாயாக! தனது தேரினைச்சேய்மையில் நிறுத்தித் தனியனாய் வந்து நுமது ஊர் யாதென்று கேட்டுக் குறுகக் குறுக நடந்து முன்னுளிற் சென்ற துறைவன் நேற்று அகன்ற இலையினையுடைய நாவல் மரம் நீர் உண்ணும் துறைக்கண்ணே சொரிந்த கனியினை அதன் அழகு கெட இழுத்துக்கொண்டு சென்று தாழை வேர்ப்பக்கத்து வளையில் உள்ள தனது அன்பு பொருந்திய பெண் நண்டிற்குத்தரும் ஓர் ஆண் நண்டினைக் காட்டி இது நல்ல பான்மையுடையது என்று கூறி நீண்டு எண்ணிய உள்ளத்துடன் மீண்டு சென்றான்;

இன்றும் உதோபார்; அவனது தேர் தோன்றா நிற்கும் நாம் அவனை எதிர்கொண்டு ஏற்க மாட்டோமாயின் மிக நாணமுடையவன் ஆகலான் அவன் அதனை மெய்யெனத் துணிவான் போலும். நான் வெள்ளிய நெடிய மணற்கரையில் மறைந்து கொள்வேனா? நீ உன்னுடைய கருத்தைக் கூறுவாயாக !

*மதுரை மருதனிள நாகனார்.*

## 381. பாலை

[தலைமகன் இடைச்சுரத்தில் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.]

நெஞ்சே! ஆளியாகிய நல்ல விலங்கினது வருத்துதலையுடைய வலியுடைய யானையின் தலைவனான களிறு வருந்த அதன் நிமிர்ந்த வெள்ளிய கோட்டினைப் பறித்துக் குருத்தினைத் தின்னும் அச்சம் உண்டாகத் தக்க சுரத்திடத்தே முகிலானது மழை பெய்யாதொழிய, எரியினைக் கக்கிச்

செல்லும் அசையுங் கதிர்களையுடைய ஞாயிறு நிழலினை அகழ்ந்து உண்ட செல்லத் தொலையாத நீண்ட இடத்தி லுள்ள கன்றின் தோலாய கூட்டினையும் சினம்பொருந்திய நாயினையும் உடைய வடுகர் தமது வில்லாற் பொரும் வெகுளி நீங்கிய அச்சம் வரும் கவர்த்த நெறிகளில் குருதி படிந்த புலால் நாறும் பெரிய சிறகினையுடைய ஆண் பருந் தினது கிளையுடன் கூடிய கூட்டம் பசிய ஊனின் மிகுதி யைத் தெரிவித்துப் பறந்தெழுந்து செவ்வானம் போல விசும்பினை அழகு செய்யும் அரிய சுரத்தினைக் கடந்து வந்த நம்மைக்காட்டினும் நம்முடைய தலைவி ;

பகைவரது போர் செய்யும் அரணை வென்ற போர்த் தொழிலில் வல்ல படையினையும் வண்டுகள் ஒலிக்கும் நறிய மாலையினையும் உடைய சேரன் போர் புரிந்து அழித்த, மாறுபட்ட பகைவரது பொருந்திய மதில் போல மிகப் பாழ்பட்ட உடலையுடையவளாகி வண்டு தேனைப் பருக ஆழமான நீரினால் தரப்பட்ட நிரையாக வுள்ள இதழ்களையுடைய குவளையது புதிய மலராய இரண்டு பூக்களைப் போன்ற, தனது செவ்வரிபரந்த மதர்த்த குளிர்ந்த கண்கள் தெளிந்த நீரைக் கொள்ளப் பெருமூச் செறிந்து வருந்தி யிருப்பளோ இரங்கத்தக்காள்.

*மதுரை இளங் கௌசிகனார்.*

## 382. குறிஞ்சி

[இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி தலைமகளுக்குச் சொல்லி யது.]

தோழி ! அருவியின் கண் பாய்ந்த கரிய விரலையுடைய பெண் குரங்கு வளமுறக் காய்த்தலைக் கொள்ளும் பலா வின் பழத்தினைத் தெப்பமாகக் கொண்டு பக்க மலையில் உள்ள பெரிய ஊரின்கண் துறை முன்பு வந்திறங்கும்

வறட்சியுறுதலை அறியாத சோலையை உடைய வெற்றி பொருந்திய மலை நாட்டின் தலைவனது சொல்லை விரும்பி ஏற்றனை;

பிறர்க்கு நேருந் துன்பத்தினைக் கண்டால் நல்லோர் தாம் பிறரேயாயினும் வருந்தி விலக்குதற்கு முயல்வர். அல்லாமலும் தமக்கு உற்ற துன்பத்தினைப் பெரிதாகக் கொள்ளாது எளிதாகக் கொள்வர். இது பெரியோர்களுடைய இயற்கை;

நம்மவர்கள் கடம்பின்கண் கொடியினைக் கட்டி மாலை சூட்டிப் பல வேறு குரலையுடையனவாகிய தாளத்தின் வழிப்படும் ஒரு தூக்கினையுடைய இனிய வாச்சியங்களைக் கொண்டு காட்டிற் பொருந்திய நெடிய முருகனைப் பாடும் பாட்டிற்குப் பொருந்த வெறியாட்டுச் செய்யும் பெரிய களஞ்சிறப்படைய மெல்ல ஆடுதலை விரும்பினர், என்று தலைவனைக் காணுமிடத்து அவனுக்கு நீ உணரக் கூறுதல் தக்கது.

*கபிலர்.*

## 383. பாலை

[மகட் போக்கிய தாய் சொல்லியது.]

வயலைக் கொடியே! நீ வாழி. தன்னை வளர்த்தெடுத்த என்னையும் நினையாளாய்த் துறந்து, ஊரினுஞ் சேரியினும் ஒரே தன்மையாக அவர் எழக், காடுஞ் சோலையும் அத்தலைவனோடு போகத் துணிந்து மிகப்பலவாகிய நாடுகளையும் கண்டங்களையுங் கடந்த இளையவன் கண்மை உடையாளுக்கு அழகு செய்விப்பார்போல் வாடியுள்ளாய்;

ஒவ்வொரு நாளும் பல கிளையாய ஒழுகிய கொம்புகள் பாரந் தாங்காது சுழல விரிந்த அல்குலில் தழையுடைக்குக் கூட்டும் அழகிய தளிர்களை நீ தருமாறு அழகிய மடப்

பந் தோன்றும் கண்களையுடைய என் மகள் பிறந்த வளை யல் அசையவும், காலிற் பெய்த சிலம்பு ஒலிக்கவும் தொழிற்பட்ட மூங்கிற் குழாயின் வழியாக வந்து விழும் நீரினை, நிறைந்த நீரினைக்கொள்ளும் பெரிய சாலில் அசைய அசைய முகந்துஎடுத்துக்கொண்டு வந்து வார்த்தாரைப் போல் நின் முகத்தினைப் பார்த்து நாள்தோறும் பெய்வாள் ஆவள் அன்றோ? அவள்போல நிறைய நீரினை உண்பித் துப் புரப்பார் யாரை இனி நீ பெறுவாய்? நீ இரங்கத் தக் காய்.

*கயமனார்.*

## 384. முல்லை

[வினை முற்றிய தலைமகன் வரவு கண்டு உழையர் சொல்லியது]

பாகனே! வாழ்வாயாக. பாசறைக் கண் இருந்த நம் அரசன் அரிய போரினை வெற்றிகொண்டு முடித்தானாக. விரும்பிய காதலொடு யானும் பெரிய தேரின் கண் ஏறி யமர்ந்ததை அறிந்ததே யல்லாமல் இங்குவந்து சேர்ந்ததனை நன்றாக அறிந்திலேன். முயற் குட்டிகள் தாவிக் குதிக்கும் முல்லையாகிய அழகிய காட்டில் கவர்த்த கதிரமைந்த வரகினையுடைய சிறிய ஊரினிடத்தே மென்மைத் தன்மை வாய்ந்த தலைவியின் இல்லின் கண் தேரினை நிறுத்தி இறங்குக என்ற நின்னுடைய சொல்லைக் கேட்டு மருட்சி யடைந்தேன். விண்ணில் இயங்குந்தன்மை யுடைய காற்றினைக் குதிரையின் வடிவாகப் பூட்டி வந்தனையோ? அல்லாமல்நினது மனத்தினை அவ்வாறு பூட்டி வந்தனையோ கூறுவாயாக என்று கூறிப் பெருந்தன்மையுடைய தலைவன்; தனது மலையை ஒத்த மார்பினிடத்தே அவனைச்செறிப்போடுகத் தழுவித்தன் மனைக்கண் உடன்கொண்டு புகுந்தனன். திருந்திய அணிகளையுடைய அவன் தலைவி விருந்தோம்புஞ் சிறப்பினைப்பெற்றாள்.

*ஒக்கூர் மாசாத்தியார்.*

# 385. பாலை

[மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.]

மயில் போலுஞ் சாயலையுடைய என் மகள் தன்னையொத்த தோழிமாரும் என்னையொத்த தாய்மாருங் கண்டு மகிழ, வலிய கையினையுடைய யானையைங் கடிய தேரினையு முடைய சோழரது காவிரியின் பக்கத்ததாகிய உறையூரை யொத்த செல்வம் மிகுந்த பெரிய மனையில் மேலோர் வதுவை செய்விக்க நிகழும் நல்ல சிறப்புற்ற மண விழாவில் அவளுக்கு மயிர்ச் சாந்தினைப் பூசி, மற்றும் பொருந்திய பல சிறப்புக்களையும் செய்விக்க மணந்து செல்லாளாய;

மூங்கிலுடன் நெல்லி மரம் உயர்ந்த கற்பாறைகளையுடைய பக்க மலையிலே வழியிலுள்ள ஆலமரத்தின் வாடியசைகின்ற நெடிய விழுது தனது தேமல் பொருந்திய துடையில் நன்கு உராய்ந்திடக் கூந்தலானது ஆடும் மயிலின் தோகையைப் போலப் பொங்கிப் பரக்கத் தன்னால் விரும்பப் பெற்ற துணைவன் தனது வளை பொருந்திய முன்கையினைப் பற்றியும் பல கிளையினவாய் நெருங்கிய பெரிய மாலையாய அழகிய வடங்களைக் கொண்ட மேகலையணிந்த அகற்சியமைந்தஅல்குல் பருத்தும் நன்றாக ஊக்கமுண்டாக்க ஊக்கங்கொண்டு வழி வருத்தம் எண்ணாது கழிந்த, முட்போன்ற கூரிய பற்களையும் பவளம் போன்ற வாயினையும் உடைய அஞ்சாமைத்தன்மை பொருந்திய இளையவள், அறியப்படாத நாட்டிலே சிலம்பு கழித்து வதுவை செய்திருத்தல் துன்பத்தையுடையது.

*குடவாயிற் கீரத்தனார்.*

## 386. மருதம்

[தோழி வாயின் மறுத்தது. தலைமகள் தகுதி சொல்லியதூஉமாம்.]

பொய்கைக்கண் உள்ள புலால் நாறும் பெரிய நீர்நாயின் ஆண், நாட்காலத்தே வாளையாகிய இரையினை ஆராயும் ஊரராயுடைய தலைவ! பெருமானே!

மறைந்து மெல்லெனவந்து முகமனுரைகள்மொழிந்து, கரிய பெரிய கூந்தலையுடையமடவோளே! யானும் நினது சேரியில் உடையவளே; அயல் மனைக்கு உரியேன் உனக்குத் தங்கையாவேன் என்று கூறித், தன் கையின் மோதிரம் அணிந்த மெல்லிய விரலால் தண்ணென்று பொருந்துமாறு நெற்றியினையும் கூந்தலையுந் தடவிப், பகற்போதில் வந்து மீண்ட ஒள்ளிய நெற்றியினையுடைய நின் பரத்தையைக் கண்டு;

பாணன் என்பானது மற்போர் செய்தலில் வல்ல மார்பினது வலிமை மிகலான் வருந்தி அவனோடு எதிர் நின்று பொருதலை மேற்கோண்ட ஆரியப் பொருநன் என்பானது வலி நிறைதலைக்கொண்ட திரண்ட முழவு போன்ற தோள்கள் அப்பாணன் கையகப்பட்டு ஒழியக் கிடந்த வேறு வகையாகிய கிடக்கையைப்பார்த்து, நல்ல போர் வல்ல கணையன் என்பான் நாணியதுபோல யான் நாணமுற்றேன்.

*பரணர்.*

## 387. பாலை

[தலைமகளது குறிப்பறிந்துதோழி தலைமகனைச் செல வழுங்கச் சொல்லியது.]

இவளுடைய திருந்திய அணி நெகிழவும் பெரிய தோள் மெலியவும் அரிபரந்தமதர்த்த கண்களில் நீரொழுக

வுஞ் செல்லுந் தலைவரே! உவர்மண் அரித்தலால் மயிர் கழிந்த ஊன் பொருந்திய தலையினையுடைய சிறுவருடன் ஆடையின் மறுக்களைச் சிதைத்த கறை பொருந்திய கூரிய நகத்தினையும், கஞ்சிப் பசைகொண்ட விரலையும் உடைய வண்ணாத்தி, நெடும்பொழுது பிசைந்து கஞ்சியூட்டிய அழகிய ஆடை ஒளிரும் பொன்வடம் அணிந்த அல்குலின் கண், அழகிய திதலையழிய அதனைப் பார்த்து ;

கொடுந் தொழிலையுடையரும் பிணக்கம் பொருந்திய காடுகளில் தங்கிக் கிடப்பவருமாகிய வேட்டுவரது கூப் பாட்டைக் கேட்டு அஞ்சிப், புறத்தே வரிகளை யுடைய காடையின் நீலமணிபோன்ற கண்ணையுடைய பேடை, நுண்ணிய புள்ளிகளை அணிந்த கழுத்தினையும் கூரிய முள்போன்ற விரலமைந்த சிவந்த காலையும் உடைய தன் சேவலை அழைக்கும் பாலை நிலத்திடத்தே, விற்படை நெருங்கிய அரிய போரினை அழியக் கொன்று நல்ல புகழை நிலைநாட்டிப் பட்ட மானம்மிகுந்த வீரரது வரிசையாக நிற்றலையுடைய நடுகல்லைப் பொருந்தியிருந்து, கண்ணிமை யாது உணவை விரும்பிக்கிடந்த முதுமை வாய்ந்த பல்லி சிற்றளவில் தடைப்படுத்துவதாயின், பெரிய நெற்றிப் பட்டம் அணிந்த யானையிற் செல்லும் அரசராயினும் அவ் விடத்தில் இருந்து மேலே செல்லாது மீளுங் காட்டின்கண் தலைவர் சென்றார் என்று கூறி ஆற்றியிருக்க வல்லவர்க்கு நீர் விரைவில் வந்து விடுவீராதலைக் கூறுமின்.

*மதுரை மருதனிள நாகனார்.*

## 388. குறிஞ்சி

**[இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லி யது. தோழி தலைமகளுக்குச் சொல்லியதுமாம்.]**

தோழி வாழி! யான் கூறுவதனைக் கேட்பாயாக! நமது மலையின் மூங்கிலை யறுத்துச் செய்த வெவ்விய ஓசை

பொருந்திய தட்டையால் நறிய மணங்கொண்ட சந்தன மரத்தை முழுவதும் வெட்டி உழுது விதைத்த தினையின் தூய்மையுடைய சிறு கதிர்களைக் கவர்தலால், மூங்கில்கள் நெருங்கிய பெரிய மலைச்சாரலின் கண்ணேயுள்ள கிளிகளை ஓட்டி ஓங்கிய பெரிய மலையில் ஒளி பொருந்திய கொத்துக்களில் நறிய மலர்களைக்கொண்ட வேங்கை மரத்தின் அழகிய கவையிடத்தே உயரக் கட்டிய பரணிற் பொன்னையொத்த நறிய பூம்பொடியினை ஊதும் வண்டின் இனிய ஓசையைச் செவியுற்று இருந்தேமாக;

கரிய நீண்ட கூந்தலையுடைய மடப்பம் வாய்ந்த மங்கையரே! விரையும் இயலுடைய அம்புவாய்ந்ததாக, புண்மிகுந்து துன்பத்துடன் வந்த உயர்ந்த கோட்டினையுடைய களிறு உங்கள் புனத்தின்கண் போதலுற்றதோ? என்று கோபித்தலைக் கொண்ட நாய் கறுவித் தன் பக்கவிலே தொடர வினவிச்சென்ற வலிய வில்லையுடைய காளையாகிய தலைவனது;

சாந்தம் பொருந்திய மார்பினையும் அழகினையும் மிக விரும்பி இங்கே நாம் வருந்தும் துன்பத்தினை உணராதவளாய், நம் அன்னை நன்றாகிய தன் நெஞ்சத்தில் வேறுபாடாக உணர்ந்து வெறியாடல் வேண்டுமென அழைத்து வந்த முதுமை வாய்ந்த வேலன்,

எம் இறைவனை முருகவேள் வருத்தலின் இந்நோய் வந்துள்ளது இதனைத் தணிவிக்கும் மருந்தினை யான் அறிவேன் என்று கூறுவானாயின்; நுமது இறைவனாகிய முருகவேள், கொதிக்குஞ் சினமும் மத மயக்கமும் உடைய களிற்றின் உடலினுள் உருவிச் செல்லச் செந்நிறம் பூசினாற் போன்ற ஊன் பொருந்திய அம்பினுடன் காட்டின் விலங்குகள் சென்ற அடிச்சுவட்டினைத் தொடர்ந்து வேட்டையாடற்குச் செல்லுதலும் நாம் வினவின் என்னையோ?

<u>ஊட்டியார்.</u>

## 389. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வற்புறுக்குந் தோழிக்குச் சொல்லியது.]

தோழி வாழி! நீ அறியாது கூறுகின்றனை. செறிந்த கொத்தாகவுள்ள மயிர்ச் சாந்தணிந்த கூந்தலையாற்றி மலரையணிந்தும் இனிமையுற மணக்கின்ற அழகிய நெற்றியிற் பொட்டணிந்தும், பல இதழ்களையுடைய புதிய மலர்களைக் கிள்ளி அவ்விதழ்களுடன் நிறம் வேறுபட அவ்வவற்றின் பொடிகளையும் நல்ல இளைய அழகிய முலைகளில் அப்பியும், பெரிய தோளில் தொய்யில் எழுதியும் சிறிய பரட்டினையுடைய அழகிய சிவந்த சிறிய அடியில் செம்பஞ்சுக் குழம்பினைத் தடவியும் இவ்வாறெல்லாம் என்னைப் பாதுகாத்தும், நின்னைப் பாராட்டிப் பேசியும் பலவாய மலர்களைப் பரப்பிய பள்ளிகளிற் பகற்பொழுதும்நீங்காராகி நம்மனைக்கண்ணே தங்கி யிருப்பவராகிய நம் தலைவர்;

இரப்பவர்களுடைய ஏந்துங் கை நிறையுமாறு அவரைப் புரக்கின்ற ஈகையாளர்கள் வருத்தமில்லாத உள்ளத்துடன் விரைந்து வந்து புதிய பொருள்களைத் தந்து மகிழ்வதற்குரிய அரிய பொருளை ஈட்டி வரலை விரும்பிப் பகைவரது சிறிய புல்லிய இழிசொல்லாகிய துன்பம் அழியவும் தம்மிடத்திலே நல்ல புகழினை நிறுத்தவும்;

வலிய வேலினையுடைய வானவரம்பனது நல்ல நாட்டின் அப்பாலுள்ள வெப்பம் மிக்க கொடிய காட்டினை அடைந்த இடத்தே, வழிச் செல்வோராகிய புதியர் வேறு வேருகப் பிரிந்துபோய் அலறக் கொல்லுங் கொடுமை நோக்கித் தன் நிலையைவிட்டு வேறிடத்துத் தங்கிய பெரிய களிற்றினைக் கொன்ற பெரிய நிறம்பொருந்திய ஆண்புலி குருதியாற் சிவந்த நிலத்திடத்தே தன் காலை வளைத்துத் தாவி, வலத்தே வீழ்த்திய வெற்றியால் வெற்பினிடம் எதிர்

ஒலி செய்யப் பொருந்திய முகிலினிடத்தே இடிபோல முழங்கும் நெடிய மரங்களையுடைய மலைவழிகளைக் கடந்து சென்றனரே.

நக்கீரனார்.

## 390. நெய்தல்

**[தலைமகன் பாங்கனுக்குச் சொல்லியது; நெஞ்சிற்குச்சொல்லிய தூஉமாம்.]**

பாங்கனே! உவர் நிலத்தே விளைந்த உப்பினது விலையைக் கூறி நெறிகளிற்படும் புழுதியையுடைய நெடிய சேய்மைக்கண் செல்லும் செறிந்த கோல்களைக்கொண்டு செல்லும் உப்பு வாணிகர் போவதாகிய நீண்ட நெறிகளில், அக்கூட்டத்துடன் சேர்ந்து வாழும் வாழ்க்கை சிறந்தது போலும்;

வளைந்து சுரிந்த கூந்தலின் முடி முழுவதும் பெரிதும் அலையக்கொண்டு மெல்லிய அகன்ற அல்குல் அழகுபெறத் தரித்த பல தளிருடன்கூடியதழையுடை அசையுமிடத்து அசைந்து நடந்து ஊரவரே! நெல்லும் உப்பும் விலை ஒப்பாகும் கொள்வீராக என்று சேரிகள்தோறும் கூறி விற்கும் அழகிய வளைந்த உந்தியினையும் மூங்கில்போன்ற தோளினையுமுடையாய்! நினது உடலின்கண் உளதாம் இன்பத்திற்கு விலையினை அறிந்திலமே என்று யாம் கூறிச் சிறிது தடைப்படுத்தினேமாக!

தனது பெரிய அரிபடர்ந்த மையுண்ட கண்ணினால் மாறுபட்டனள்போல நோக்கி எம்மைத் தடுப்பீர் நீவிர் யாவிரோ என்று கூறி இளநகையுடையாளாய்ச் சிறிது பெயர்ந்து நின்ற சிலவாய நிறைந்த வெள்ளிய வளைகளாற்

பொலிவுற்ற பல மாண்பும் உடைய பேதையின்பொருட்டு என் நெஞ்சம் தன் வலியினை இழந்துவிட்டது.

அம்மூவனார்.

## 391. பாலை

[பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

தோழி! தன் இரையினைப் பார்த்திருக்கும் காட்டுப் பூனையின் கூரிய பற்களையொத்த மெல்லிய வரிகளையுடைய அரும்புகளுடன் கூடிய நுண்ணிய கொடியாகிய காட்டு மல்லிகையின் பூக்கள் நிறைந்த அகன்ற வட்டியை உடையோராகிய பூவிற் போர்கொள்ளும் இடம் பெறுராய் விஞ்சியவற்றை ஒழித்துக் கொணர்ந்த தலையிற்சூடிய மண முடைய மலர்களைத் தேன்பாயும் முல்லைப் பூக்களொடு புறத்தே அகற்றி எனது தண்ணிய நறிய கூந்தலிடத்தே துயின்ற தலைவர்;

மதக்களிறுனது மண்ணில் ஊன்றிய வெள்ளிய கொம்பினை அசைத்துப் பெயர்க்க இயலாது, தன் வாயால் நிறையுமாறு புகுத்திய வலி குன்றிய பெரிய கை. மலைமுழைஞ்சினுள் நுழையும் பாம்புபோலத் தோன்றும் வெப்பம் மிகுந்த இடங்களையுடைய காட்டைக் கடந்து சென்றார். அவர் பண்டு புனைந்த எனது நிறைந்த கூந்தல் முடியைக் காணுந்தோறும் முன்புள்ள எனது பழைய அழகு நினைக்கப்படுகின்றது. அவர் சென்றபின் இன்றொடு சில நாட்களே வந்தன வாயினும் எம் கண்கள் மிகவுந் துயிலாதனவவாகும்.

காவன்முல்லைப் பூதனார்.

# 392. குறிஞ்சி

[பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகட்குக் குறை நயப்பக் கூறியது.]

தோழி ! வாழி. இப்பொழுது யான் கூறுவதனை மனம் பொருந்திக் கேட்பாயாக. கல்லென்னும் ஒலியுடன் கூட்ட மாகிய முகில்கள் மழையைச் சொரிந்த கானமெல்லாம் அடங்கிய இரவில் தினையை மேய்ந்த யானையின் கூட்டம் நிலை கெட்டு ஓட, மலையினிடத்தே உயர்ந்த பரணில் இருந்து குறவன் வீசியெறிந்த வலிய விசைவாய்ந்த கவண் கல்லின் கூடிய ஓசை ஒல்லென்றொலிக்க அது கேட்டுத் தறுகண்மையுடைய புலிமுழங்க யானை கதற, அகற்சியுற்ற காட்டில் உள்ள அழகிய மயில் இடியோசையென ஆட மலை முழுவதும் அஞ்சும் பெரிய கற்களையுடைய மலை பொருந்திய நாட்டையுடைய தலைவன் ;

காட்டில்; விரும்பப்படும் பெண் யானையை இழந்த தொங்குகின்ற நீண்ட பெரிய கை பொருந்திய வெள்ளிய கொம்பினையுடைய களிறு உண்ணுந் தழையினை உண்ணாது நீக்கிய வாட்டத்தை ஒத்தை அழகுடைய தனது யாக்கையின் மெலிவினை நன்கு அறிந்து வைத்தும், நம்பால் இரந்து பின்னிற்றலை வெறுதவனாகி ;

நல்ல பொன்னாற் செய்த பாவை போன்ற கட்டழகினையும் விரும்பப்படும் மென்மைத் தன்மையினையும் உடைய மடப்பம் வாய்ந்த தலைவி பின்பால் திங்கு இல்லையாம்படி நீ புணையாகப் புகுவாயாக என்று கூறிச் சிறிதேனும் நீங்குவானாயின், அவன் நாம் வருந்தும்படி பெயர்ந்து செல்லுதல் நமக்கு மிகவும் துன்பமாவதே யாகும். ஆனால் அவன் நாம் வருந்தும்படி பெயர்ந்து

செல்லுதல் நமக்கு மிகவும் துன்பம் ஆவதேயாகும். ஆனால் அவன் நம்மைப் பிரிந்து செல்வானாதல் இல்லை.

அன்றியும் தனக்கு உரித்தல்லாத பண்பினால் ஒரோ வழிப் பிரிவானாயின், போர் ஒழிய நீங்கிய வெற்றி வேலினை யுடைய பகையரசன் போரின்கண் கொல்லுதலையுடைய படையுடன் மீளவும் மதிற்புறத்தே வந்து தங்கத், தன்னைப் பற்றுக்கோடாகவுடைய நிலைபெற்ற மதிலமைந்த அரண் அப் பகைவேந்தனை எதிர்த்து நிற்றல் ஆற்றாமையான் கண் டார் விரும்புமாறு உயர்ந்த மூங்கில்கள் செறிந்த மலைப் பக்கத்ததாகிய காட்டில் வதிந்திருந்த, கைக்கொண்ட வேலினையுடைய வலியமைந்த தனது தோற்றமானது பிழையாதவாறு அவ்வரசனுடன் போர்செய்து தன் பழைய புகழைநிலைநிறுத்தியவனாகிய நன்னனைப்போலஅவ னைச் சேர்த்து யான் நினது நலத்தினை மீண்டும் கூட்டி வைப்பேன் ஆவேன்.

மோசிகீரனார்.

## 393. பாலை

[பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.]

தோழி! வாழி: நம்முடைய தலைவர் சிகரம் உயர்ந்த பாறைகளையுடைய மலைகள் பலவற்றைக் கடந்து, வேற்று நாட்டை அடைந்த பொருள் தேடும் முயற்சியை உள்ளத் தால், வழிச்செல்லும் புதியரது மிகுந்த பசியொழியப் புதுக் கொல்லையில் தழைத்த ஈரிய இலையின் நீண்ட இதழை யுடைய வரகின் கவர்த்த கதிருடன் கூடிய தட்டைகளைத் தொகுத்த பொலியில், மாடுகளின் கவர்ந்த குளம்பால் துவைக்கப்பட்ட பல கிளைகளில் இருந்து உதிர்ந்த வரகினை இடமகன்ற பாறையிற் செவ்விய இடத்தில் குவித்து, வரி கள் பொருந்திய பருத்த தோள்களையும் நீண்ட செவிகளை

யும் உடையதாயர், பண்ணைக் கீரையின் வெள்ளிய பழத்தின் அரிசியை ஒப்பத் திரிமரந்தேய்த்த சுளகினுற் கொழிக்கப்பெற்ற வெள்ளிய அரிசியைப், பூணுற் சிறப்பையுடைய உலக்கையால் முறையாகச் செலுத்தி, உரலிற்பெய்து தீட்டிய உரலின்குழி நிறைந்த அவ்வரிசியை, அங்குள்ள பெரிய சுனையின் நீரொடு முகந்து, மண்ணுற்செய்த பானையில் கற்களை அடுக்கியமைத்த அடுப்பில் ஏற்றிக், கொத்துக்கள் நிறைந்த கொன்றையின் மிகுந்த பூந்தாதுபோல, இடையர் ஆக்கிய விளங்குகின்ற அவிழாகிய சோற்றை, மதர்த்த நல்ல பசுவின் பாலுடன் கூட்டி யளிக்கும் இடமாகிய பசுநிரைகளை மிகப்பெற்ற மிகுந்த புகழையுடைய புல்லியென்பானது, தேனிறால் தொங்கும் உயர்ந்த மலைகளையுடைய நல்ல நாடுகட்கு அப்பாற்பட்ட வேங்கட மலையைக் கடந்து சென்றுள்ளாராயினும்;

அழகு பொருந்திய மயிலின் தொகுதிகொண்ட தழைத்த தோகையினையொப்ப, மயிர்ச்சாந்து பூசப்பெற்ற தண்ணிய நறிய கூந்தலில் குற்றமில்லாத குவளைப் பூவுடன் விளங்கும் இதழ்களையுடைய வேனிலிற் பூக்கும் காட்டு மல்லிகைப் பூவினையுஞ் சூடிய நினது இன்பம் வாய்ந்த கூட்டமாகிய இனிய துயிலினை மறந்து அவ்விடத்திலே அவர் தாழ்ந்திருப்பார் அல்லர்.

*மாமூலனார்.*

## 394. முல்லை

[இரவுக்குறித் தலைமகளை இடத்துய்த்து வந்துதோழி தலைமகனை வரைவு கடாயது.]

மிகுந்த வண்மையை உடைய தலைவனே! காட்டிலே தங்கும் இடையன் தன்னுடைய ஆட்டினங்களை ஒருவழிக் கூட்டும் வாயை மடித்து எழுப்பும் சீழ்க்கை யொலியைக்

கேட்டு அஞ்சிக் குறுமுயலானது மன்றத்தின் கண்ணுள்ள பெரிய புதரில் மறைந்து கொள்ளும் முல்லை நிலத்து ஊராகிய எமது நல்ல சிறிய ஊரின்கண்; களாவும் பழுத்துப் புளிப்புச் சுவையை எய்தின. விளாவும் முதிர்ந்து பழுத்தன. சிறிய தலையினையுடைய செம்மறியாட்டினது பழுப்புநிறம் வாய்ந்த முற்றிய தயிராகிய உலையில், புதுக்கொல்லையில் விளைந்த வரகினது குத்துதல் மாட்சிமைப்பட்ட அரிசியுடன், கார்மழை மிகுந்தமையால் நனைந்த வாயினையுடைய புற்றில் இருந்து வெளிப்பட்டொழிந்த ஈயலையும் இட்டுச் சமைத்த இனிய புளிப்புவாய்ந்த விருப்பந்தருஞ் சோற்றினைச், சிவந்த பசுவின்வெண்ணெய் வெப்பம் பொருந்திய அச்சோற்றின்மேலே கிடந்து உருக அதன்மேற் பெய்து நின் ஏவலர் முன்பு உண்ண அதன்பிறகு நீயும், முள்ளிட்டுக் கட்டிய வேலியினிடத்தே வளைந்த கால்களையுடைய பந்தரையுடையதும், புதுக்கலம் போன்ற செம்மண் பூசியதுமாகிய சிறிய வீட்டில். புனைந்த கரிய கூந்தலையுடைய நின் மனைவி விருந்தயரப் பால்பெய்த உணவினை உண்ணுதற்கு ஒருநாள் வந்து செல்வாயாக!

*நன்பலூர்ச் சிறுமேதாவியார்.*

## 395. பாலை

[பிரிவிடைத் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

தோழி! வாழி. சுட்டெரிக்கும் ஞாயிற்றின் கதிர் ஈரத்தினைத் தொலைத்தமையால் நீரற்ற அகன்ற இடத்தில் உள்ள தீ கவர்ந்து உண்டமையால் மரங்களின் நிழலும் ஒழிந்த நெறியில். வற்றிய மரக்கொம்பினையொத்த கவர்த்த கொம்பினையுடைய அழகிய கலைமான், அறல் விளங்கினால் ஒத்த பேய்த்தேரினை நீரென விரும்பியோடித் தனிமையுற்றமையாலான கலங்கிய உள்ளத்துடன் மேய்கின்ற தன்னுடைய பெண்மானை யழைக்கும். மெலிவுற்றொழியும் துணபி ...

தரும் குரலை அரிய காட்டினிற் செல்லுவோர் ஆளின் குரல் என்று கருதி ஆராயும் இடமாகிய செவ்விய அடி பொருந்திய ஞெமை மரங்களையுடைய பெரிய கொல்லைக ளமைந்த குன்றில் அசையுந் தண்டினையுடைய பெரிய மூங் கில்கள் ஒலிக்கும் சிமையம் வெம்பிய மலைப்பக்கத்தில் உள்ளவளாகிய காடுகளைக் கடந்து சென்ற நம் தலைவர்:

குளிர்ந்த குளத்தில் தோன்றிய வளவிய காம்பினை யுடைய குவளையின் மழைக்காலத்தே மலர்ந்த கரிய மலர் மழைக்கு எதிர்ப்பட்டாலொத்த நீரால் நிறைந்த பெரிய அமர்த்த குளிர்ந்த கண்களில் நின்று நீர் ஒழுகுந் துன்பம் ஒழிய இப்பொழுது வருவாராயின் நன்றாகும், வந்திலரே என்செய்வோம்?

*எயினந்தை மகனார் இளங்கீரனார்.*

## 396. மருதம்

**[காதற் பரத்தை தலைமகனுக்குச் சொல்லியது.]**

தலைவனே! நின்னை யான் பற்றிக்கொண்டேன் செல் லாதே. கொடியணிந்த தேரினையும் பொன்னாலாகிய பூண் களையும் உடைய நன்னன் என்பான், புன்னாடென்னும் நாட்டில் உள்ளாரை வெகுண்டெழுந்தானாக. யாழின் இசை பொருந்திய தெருக்களையுடைய பாழி என்னும் நகரிடத்தே நின்று அஞ்சாதீர் என்று கூறிய ஆஅய்எயினன் என்பான், தான் சொல்லிய சொல் பிழையாது போர் வெல் லும் பயிற்சியை உடைய மிஞிலி என்பானொடு போர் செய்து தன்னுயிரையுந் தந்தான்;

நீயோ தெறுதற்கு அரிய தெய்வத்தின்முன் தெளி வித்து மெல்லிய சந்தினையுடைய என் முன்கையினைப்

பற்றிச் சொல்லிய சொல்லினைக் கடந்து அன்புமிக்க உள்ளம் மேன்மேலும் மகிழ்ந்து சிறக்க, நின் மார்பினைத் தாராயாய் ஏதிலன் ஆயினையே, இனிமேல் யான் நின்னை விடுப்பேன் அல்லேன் ;

ஆதி மந்தி என்பாள் நீர் ஒழுகும் கண்ணினையுடையவளாய்ப் பலவற்றையும் வெறுத்திருக்கக், கடிய திறல் பொருந்திய ஆட்டன் அத்தி என்னும் அவளுடைய காதலன் ஆடும் அழகினை விரும்பி, நீர்ப்பெருக்கினையுடைய காவிரியாறு கொண்டு மறைத்தாற்போல நின் மனையாள் நின்னைப்பற்றிக் கோடலும் செய்வளென அஞ்சாநிற்பேன்;

வெகுண்டெழுந்து ஆரிய மன்னர்கள் அலறுமாறு அவர்களைத் தாக்கிப் பெரிய புகழையுடைய பழையதாகிய முதிர்ந்த இமயமலையின்மீது வளைந்த விற்பொறியைப் பதித்துக் கொடிய சினம் பொருந்திய பகை வேந்தரைப் பிணித்து வந்தோனாகிய சேரனது வஞ்சி நகரையொத்த என் அழகினைத் தந்து செல்வாயாக.

பரணர்.

## 397. பாலை

[மகட் போக்கிய செவிலித்தாய் கூறியது.]

விரைதலையுடைய வெவ்விய காளை போன்றவன் முழவின் ஒலி மாறாத விழாவுடைய அகன்ற மனையில், என் மகளது பெரிய மடப்பத்தினை யான் பாராட்டவும், நற்றாய் தனது தலைமையை அறிந்து தன் கடமைகளைச் செலுத்தவும், மணத்தின் வாயிலாகக் கொள்ளாமலும், பாசறைகள் பிளவுபடக் கூட்டமாகிய முகில் பெய்யா தொழிந்த, உயர்ந்த கொடிபரந்த காடடர்ந்த பரப்புக்கள் புள்ளிகளும்வரிகளும் பொருந்திய அல்குலையுடைய மாமை

நிறத்தினையுடையாட்கு நடத்தற்கு எளிமையுடையனவாக வென்றுவெப்பந் தணிந்த பருவத்தேசெல்லாமலும்;

கடிய பெருமையை உடைய ஆண்யானை மரம் அசையும்படி குத்திப் பிளந்ததால் புண்ணுண்டாக்கிய பொரிகள் பொருந்திய அடியினையுடைய ஓமை மரத்தின் பெரிய பட்டையுரிந்த சிவந்த அடிமரத்தினை நோக்கி அதனை ஊன் எனக் கருதி நெடிது உயர்ந்த கரிய அடியினையுடைய யாமரத்தில் உள்ள பருந்து வந்து தங்கும் வானின்கண் உயர்ந்த நெடிய சிமையங்களில் உள்ள வெவ்விய மேல் காற்றினால் அலையும் புல்லிய இலைகளையுடைய மூங்கிலின் நெல் விளையும் காட்டின்கண் உடன்கொண்டு செல்ல ஒரு தலையாகத் துணிந்தான்.

*கயமனார்.*

## *398.* குறிஞ்சி

**[காமமிக்க கழிபடர் கிளவியால் (வரைவிடத்துக்கண்) தலைமகள் தலைமகன் வரைவினின்றும் போந்த ஆற்றெடு புலந்து சொல்லியது.]**

கரையை மோதிவரும் வெள்ளம் பொருந்திய யாறே! பெரிய ஆண்புலி தாக்கியதாலாகிய புண் மிகுந்து வருந்தும் பெண் யானையால் தழுவப்படும் வலிகுன்றிய களிற்றியானை வளைந்த மூங்கிலாற் செய்த தூம்புபோல ஒலிக்கும் எம் தலைவரது உயர்ந்த மலைநாட்டில் இருந்து வருவோய்!

அணிகள் நிலையினின்றும் நெகிழ்தற்கு ஏதுவாகிய துன்பம்மிக நினைவு மிகுந்த வருத்தத்துடன் பலவற்றையும் வெறுத்துக் கூறித் தங்கி, மெல்லிய தோள் மெலிய வருந்திக், கொன்றையினது நன்கு மலர்ந்த பூக்களைப்போலப் பாழ்பட நிறைந்த பசலையுற்ற மேனியைப் பார்த்து, நெற்றி பசலையுறப்பெற்று, இன்ன நிலையினேம் ஆகிய எம்மை

இங்கு அருளுதல் செய்யாருய் நுமது தலைவன் செய்த கொடுமைக்குக் கலங்கும் குளிர்ந்த கண்களினின்றும் விரைந்து தெளிந்த நீர்பெருகவும் அறத்தினைக் கைவிட்டு நீங்குதல் குன்று பொருந்திய நாட்டினையுடைய நின் தலைவனுக்கு யாதெனப் படுமோ? உரைப்பாயாக என்று கூறி, நின்ஞெடு யாம் வெறுத்தலை அஞ்சி அவர் மலையில் உள்ள பல மலர்களையும் போர்த்துக்கொண்டு நாணத்தால் மிகவும் ஒடுங்கி மறைந்து நீங்கும் நின்னைக் கொணர்ந்து போக்கி ஏதிலாளர் ஆகிய அவர் நீதியின்றிக் கைவிடுதற்கு வன்மையுடையோர் ஆவர்; அதனை நோக்காது;

தீயினையொக்கும் பூக்கள் நிறைந்த கிளையையுடைய வேங்கையின் நிழலில் நின் செலவினைத் தவிர்ந்து தங்கிப், பெய்யும் மழை புரத்தலால் பெருக்கமுற்று, ஆரியரது பொன் பொருந்திய நீண்ட இமைய மலையை ஒக்கும் எம் தந்தையது பல பூக்களையுடைய காட்டில் அமர்ந்து, இற்றைப் பொழுது இவ்விடத்தே சேர்ந்திருந்து செல்லின் நின் காரியம் கெடுவது ஏதேனும் உண்டோ?

*இம்மென் கீரனுர்.*

## 399. பாலை

[தலைமகன் பிரிவின்கண் தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.]

உச்சியில் உள்ள பூங்கொத்துக்களை யுடையயனவாய் மயிர்ச் சாந்தினைக் கொண்டு இருண்டு இமயமலையில் உள்ள கானம்போல நாறுங் கூந்தலையும் நல்ல நெற்றியினையும் உடைய தலைவியே;

கற்காட்டினைச் சார்ந்த பக்கத்தில் குந்தாலியால் தோண்டின குழியிடத்தே தாழ்த்தல் பொருந்திய ஊற்று நீரையுண்ட இனிய தெளிந்த ஓசையை உடைய மணி களைப் பூண்ட பயன்மிக்க பெரிய ஆனிரை வறண்ட பாலை யிற் புகுந்ததாக ஊது கொம்பினால் ஒலியை உண்டாக்கி அவற்றை அங்கு நின்றும் விலக்கித், தளர்ந்த நிலையினை யுடைய கொன்றையின் குறைந்த நிழலில் தங்குவித்துப் பல ஆனினங்களையுடைய ஆயர், இசையைக் கல்லாமல் ஊதும் சிறிய மூங்கிலாற் செய்த இனிய குழலினின் றெழும் தனிமை கொண்ட தெளிந்த ஓசையினைக், குற்றமற்ற பளிங்கினைப் போன்ற தோற்றத்தையுடைய பலவாகக் காய்த்த நெல்லியின் பசிய காய்களை உண்டு, அசை யிடுகின்ற இளைய மரைமான் கூர்ந்து கேட்கும் காட்டிலே காயும் ஞாயிறு முடுகிய அழகு ஒழிந்த பாறைகளையும் மூங்கிற் கணுக்கள் உடைந்த சிகரங்களையும் இடமகன்ற பக்கமலையினையும் உடைய மலையினைக் கடந்து சென்ற நம் தலைவர் நினது இனிமை பொருந்துதலுடைய மார் பினைப் பருகுதல் போலும் காதல்மிக்க உள்ளத்துடன் பின் னித் தழுவுதல் இன்றி அங்குத் தாழ்த்திரார்.

*எயினந்தைமகனார் இளங்கீரனார்.*

## 400. நெய்தல்

**[தலைமகன் வரைந் தெய்திய பின்றைத் தோழி தலைமகட்குச் சொல்லியது.]**

தோழி! மனையைக் கடந்து தங்கினும் அலராகும் என்று கூறப்படவும், நம் தலைவனுடன் விரும்பிச் சோலை யிலே சென்று தங்கிய நம் களவொழுக்கம் நீங்கும்படி

முற்பிறப்பில் பல நன்மைகளுஞ் செய்து பொருந்துதல் உற்ற நல்வினையால் ;

புரவி நூல் கூறும் இலக்கணம் அமைந்த பிறப்பினையும், நீலமணியாலாகிய நெற்றிச் சுட்டினையும் சருச்சரையுண்டாக அடர்ந்து கொய்யப்பெற்ற மயிர் பொருந்திய பிடரியினையும் உடைய; நெய் பெய்து மிதித்து இயற்றிய கவளத்தை வெறுத்த கொழுவிய சோற்றை உண்ணுதலுடைய வரிசையாகப் பொருந்தி ஒரே தன்மையாகச் செல்லும் செலவினையும் செவ்விய தினையின் கதிர் நீண்டு வளைந்தாற்போன்ற வளைந்த தலையினையும் உடைய நல்லனவாகிய நான்கு குதிரைகளைத் தாங்கும் நுகத்தினைப் பொருந்திப், பருத்த கழுத்தில் நெருங்க அணிந்த அழகிய புள்ளிகளையுடைய பல வடங்கள் ஒலிக்கப் பூட்டி, அறிவுடைய பாகன் செலுத்தலின், தாழ்ந்த துறையில் நீர் பாய்ந்தாலொத்த, தாவிச் செல்லும் குதிரை பூட்டிய திண்ணிய தேரின், அம்பு பாய்ந்தாற்போன்ற வலிய காலின் விரைந்த செலவு ;

பாலைக் கண்டாற்போன்ற காற்றால் திரட்டப்பெற்ற வெள்ளிய மணலிடத்தே வாய்க்காலைக் கண்டாற்போன்ற சுவடு உண்டாகப்போக, நுண்ணிய குழம்பாகிய சேற்றின் பரப்பினையுடைய அவ்விடத்தே இருண்ட நீரினையுடைய குறுகிய கழியைக் கடந்து துறைபொருந்திய கடற்கரையை உடைய நம் தலைவன் வந்த அன்று ;

பூக்கள் நிறைந்த கரிய கழியிடத்தே இலைகளொடு அசையும் ஆழமான நீரையுடைய கடல் தந்த நெய்தலின் முதிராத இளைய கள் நாறும்படி கட்டு அவிழ்ந்த தண்ணிய

மலர்களை ஏனைப் பூக்கள் பலவற்றுடன் சூடி வருதலைக் கண்டு ;

பழைய பெருமையுடைய ஆரவாரம் மிகுந்து முழங்கும் கடற்கரைக் கண்ணுள்ள நீண்ட பெரிய பனைமரத்தையுடைய அலர் ஆரவாரம் மிகுந்த நம்முடைய ஊர் அந்த அலரினைவிட்டு மிகவும் புதிய தன்மையினைப் பெற்றது ஆகின்றது. அது பெரிதும் நகையினை விளைப்பதாகும்

உலோச்சனார்.

அகநானூறு வசனம்

நித்திலக்கோவை

முடிந்தது.



ஸ்ரீ இராமலிங்கம் அச்சகம் குலோ, சென்னை-7

திருக்குறள் எளியவுரை

ரூ 1-8-0

திருக்குறள் அரும்பதவுரை

ரூ 1-4-0

திருக்குறள் வசனம்

அறத்துப்பால் ரூ 1-4-0

திருக்குறள் நீதிக்கதைகள்

4 பாகம் ரூ 1-14-0